# தமிழ் நாவல்களில் சமுதாய மாற்றம்

ஐசக் அருமைராஜன்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.ஐ.டி. வளாகம், தரமணி
சென்னை 600 113.

தமிழும் அறக்கட்டளைச் சொற்பொழிவு - வரிசை எண்:5
* (நாள்: 14, 15.11.1994)

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | Tamil nāvalgalil samūṭhāya mātram |
| Author | : | Isac Arumairajan |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>C.P.T. Campus, Chennai 600 113. |
| First Edition | : | 2002 |
| Publication No | : | 423 |
| Language | : | Tamil |
| Paper Used | : | 18.6 kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type Used | : | 10 points |
| No. of Pages | : | iv+ 84 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 20/- |
| Printed by | : | Chennai Art Printers<br>No: 6, Gulam Abbas Alikhan Ist Street,<br>Thousand Lights, Chennai - 6<br>Ph: 8295714 |
| Subject | : | Studies in Novels |


* அறக்கட்டளைச் சொற்பொழிவாளர் கருத்துகளுக்கு நிறுவனம் பொறுப்பல்ல.

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை 600 113

# அணிந்துரை

அறக்கட்டளைச் சொற்பொழிவுகளை நூலாக்கி ஆய்வுலகிற்கு அளிப்பதை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் தனது கடமையாகக் கொண்டுள்ளது. 'தமிழ் நாவல்களில் சமுதாய மாற்றம்' என்னும் இந்நூல், 'கிறித்தவமும் தமிழும்' என்ற அறக்கட்டளைக்காக, எழுத்தாளரும் கலை - இலக்கிய விமர்சகருமான ஐசக் அருமைராஜன் அவர்கள் ஆற்றிய சொற்பொழிவின் அச்சு வடிவமாகும்.

சமுதாய மாற்றம் என்பது மேல்நிலையாக்கம் பெறுவதல்ல; சமநிலையாக்கம் பெறுவது என்பதைக் கருவாகக் கொண்டு தமிழ் நாவல்கள் வெவ்வேறு காலகட்டங்களில் எழுதப்பட்டுள்ளன.

சுந்தரராமசாமியின் 'ஒரு புளியமரத்தின் கதை', எப்சிபா ஜேசுதாசனின் 'புத்தம் வீடு', ஐசக் அருமைராஜனின் 'கீறல்கள்', ஜெயமோகனின் 'ரப்பர்' ஆகிய நான்கு நாவல்களை அடிப்படையாகக் கொண்டு படைக்கப்பட்டுள்ள இந்நூல் யதார்த்தவாதத்திற்கு அடிப்படையாம் மனிதாபிமான யதார்த்தவாதத்தின் அடிப்படையில் சமுதாயமாற்றம் என்பது சமநிலையாக்கமே என்பதை எடுத்து விளக்குகின்றது. நூலாசிரியரின் கூற்றில் எடுத்துக்காட்டினால் 'சமுதாயச் சமநிலையாக்கம் உருவாகச் சமுதாயத்தோடு தொடர்புடைய அனைத்தும் சமநிலை பெற வேண்டியுள்ளது. இந்தத் தத்துவம் மட்டுமே எதிர்காலச் சமுதாயத்தில் மனித வாழ்வுக்கும் பாதுகாப்பாய் அமைய முடியும்' என்பதே இந்நாவல்கள் வெளிப்படுத்தும் கருத்தாக்கமாகும். அறக்கட்டளை வரிசையில் இந்நூல் குறிப்பிடத்தக்க இடத்தைப் பெறும். நூலாசிரியருக்கு நிறுவனத்தின் சார்பில் எனது பாராட்டுகள்.

நிறுவனத்தின் வளர்ச்சியில் ஆர்வத்துடன் அக்கறை காட்டிவரும் நிறுவனத்தின் தலைவரும், தமிழக அரசின் கல்வி மற்றும் தமிழ் ஆட்சிமொழி- பண்பாட்டுத்துறையின் மாண்புமிகு அமைச்சருமான முனைவர் மு. தம்பிதுரை அவர்களுக்கும், தமிழ் ஆட்சிமொழி - பண்பாட்டுத்துறை மற்றும் இந்து சமய அறநிலையத்துறையின் செயலர் திரு பு.ஏ. இராமையா இ.ஆ.ப. அவர்களுக்கும் கூடுதல் செயலர் திரு தா. சந்திரசேகரன் இ.ஆ.ப. அவர்களுக்கும் நன்றி.

இந்நூலுக்கு ஒளியச்சுக்கோப்புச் செய்து தந்த நிறுவனக் கணிப்பொறி உதவியாளர் திருமதி இரா. வெண்ணிலாவிற்கும், அழகிய முறையில் நூலை அச்சிட்டுத் தந்த சென்னை ஆர்ட் பிரிண்டர்ஸுக்கும் நன்றியும் பாராட்டுகளும் உரியன.

இயக்குநர்

# முன்னுரை

'தமிழ் நாவல்களில் சமுதாய மாற்றம்' என்ற தலைப்பில் நான்கு நாவல்களை இங்கு அணுகியிருக்கிறேன்.

நான்கு நாவல்களும் குமரி மாவட்ட மண்ணில் பிறந்தவை.

ஒரு புளியமரத்தின் கதை

புத்தம்வீடு

கீறல்கள்

ரப்பர்

முதல் நாவல் ஒரு தோற்றுவாய் மட்டுமே. மீதம் மூன்று நாவல்களில் முதல் இரண்டும் கிறித்தவம் சார்ந்த பிரபல எழுத்தாளர்களால் படைக்கப்பட்டவை. கடைசி நாவல் கிறித்தவம் அறிந்த, ஆனால் கிறித்தவர் அல்லாதவரால் படைக்கப்பட்டது.

இந்த மூன்று நாவல்களும் மதம் மாறிய நாடார்களைப் பற்றியவை. கிறித்தவப் பின்னணி கொண்டவை. இவற்றை அணுகும் போது இந்த நாவல்கள் சமுதாய-மாற்றங்களையும், மேல்நிலையாக்க வீழ்ச்சியையும் அகலமாகவும், ஆழமாகவும் வெளிப்படுத்துவனவாகத் தோன்றியவை. இந்த நூல் இதைத் தெளிவாகச் சொல்லுவதாக நினைக்கிறேன். முழுமை பெற உங்கள் கருத்துக்களை அறிய விரும்புகிறேன்.

நான் சொற்பொழிவு ஆற்றி ஏழு ஆண்டுகளுக்குப் பின்னர் இந்நூல் வெளிவருகிறது. அறக்கட்டளைச் சொற்பொழிவு ஆற்ற வாய்ப்பளித்த அந்நாள் இயக்குநர் முனைவர் ச.சு. இராமர் இளங்கோ அவர்களுக்கும், என்னுடைய உரையை நூலாகக் காணும் வாய்ப்பைத் தந்த இந்நாள் இயக்குநர் முனைவர் சா. கிருட்டிணமூர்த்தி அவர்களுக்கும் நன்றி.

டவர் கிராபிக்ஸ்
26-D, கார்மல் காம்ப்ளக்ஸ்
கார்மல் நகர்
நாகர்கோயில் - 629004

**அன்புடன்,**
**ஐசக் அருமைராஜன்**

# தமிழ் நாவல்களில் சமுதாய மாற்றம்

புனைகதை வளர்ச்சி உரைநடையோடு தொடர்பு கொண்டது. சிறுகதை, நாவல் வடிவங்கள் உரைநடை இலக்கியங்களே. உரைநடைக்குள் எத்தனையோ வகைகள் உண்டு. இந்த வகைகள் எழுதுகோல் சம்பந்தப்பட்டவை; எழுதுகோலைக் கையாள்கிறவன் சம்பந்தப்பட்டவை. எழுத்தில் ஒன்றும் இல்லை. எல்லாமே எழுதுகிறவனின் ஆற்றலைப் பொறுத்தது. உரைநடைவகைகளை ஆராய எழுத்தாளனின் திறமைகளை ஆராய வேண்டியுள்ளது.

எல்லா உரைநடை எழுத்தாளனும் நாவல் எழுத்தாளனாகவோ, சிறுகதை எழுத்தாளனாகவோ உயரமுடியாது. நாவல், சிறுகதை இலக்கியத்துக்கான உரைநடை வேறு. அதற்கும் பண்பட்ட கவிதைக்கும் ஒருவகை சம்பந்தம் உண்டு; ஆனால் அது கவிதையன்று; உரைநடையுமன்று.

எல்லாக் கவிதைகளும் உரைநடையின் ஒருவகை மாற்றுருவங்களே; யார் நினைத்தாலும் அதை எழுதிவிட முடியும் என்று நினைப்பது தவறாகிவிடும். அப்படி எல்லோரும் அதில் கை வைத்து விட முடியாது. எழுதுகிறவனின் ஆற்றல் தனிவகை. அது எழுத்துக்கு ஏதோ ஒரு வகையான உயிரை வழங்குகிறது. அது சுவாசம்; அது உயிர்த்துடிப்பு; அது இயங்கவைப்பது.

ஆக, நாவல், சிறுகதை வடிவங்கள் உரைநடை என்றாலும் உரைநடையில் வேறுவகை. என்ன வகை என்று இலக்கணம் வகுத்துக் கொள்வது கடினம். சில எடுத்துக்காட்டுகளைக் கூறலாம். சில என்பது தவறு; சிலரை எடுத்துக்காட்டாகக் காட்டலாம். புதுமைப்பித்தனைக் காட்டலாம், மவுனியைக் காட்டலாம்; இன்னும் ஒரு சிலரைக் காட்டலாம். சற்றுப் பின்னர்ச் சிறுகதைக்கு ஜெயகாந்தனைக் காட்டலாம். நாவலுக்கு எப்சிபா ஜேசுதாசனைக் காட்டலாம். எப்சிபா ஜேசுதாசனிடம் நாவல் நடை உன்னதமாக வந்திருப்பதாகச் சொல்லலாம். 'புத்தம் வீட்'டில் அதை எளிதாய் உணர முடிகிறது. அப்புறம் அவரின், 'டாக்டர் செல்லப்பா', 'மா-னி', 'அனாதைகள்' போன்ற நாவல்களில் அது விட்டுப்போய், நாவல்களைப் பேசப்படாத நாவல்களாக்கி விட்டது. எது விட்டுப் போய்விட்டது? உன்னதமான நாவல் நடைதான்!

ஜெயமோகனின் மூன்று முக்கிய சிறுகதைகளான, 'பல்லக்கு', 'போதி', 'படுகை' ஆகியவற்றில் சிறுகதையின் உன்னத நடை - உரைநடையில் வித்தியாசமான நடையாக நிற்கிறது. முதலில் அதுதான் அவரை

அடையாளம் காட்டியது எனலாம். நாவலில் அவரின் நடை வேறுபடுகிறது. அதில் மூவகைத் தாக்கங்கள் உண்டு. 'புத்தம் வீடு', 'புளியமரத்தின் கதை', 'சீறல்கள்' என்ற மூன்று வகைத் தாக்கங்கள் அவை. ரப்பர் நாவல் களத்தால் வேறுபடுகிறது.

மீரானின் 'ஒரு கடலோர கிராமத்தின் கதை'யில் இதே வகைத் தாக்கங்களைக் கூறலாம். ஆனால், இசுலாமியக் களம் உறுதியாக நிற்கிறது. 'துறைமுகம்', 'கூனன் தோப்பு' இரண்டும் படைப்பாளியின் பலவீன நடைக்குச் சான்றுகள்.

உரைநடையிலிருந்து நாவல் நடை வேறுபடாவிட்டால் நாவல் நிற்காது. மு.வ. இந்த வகையில்தான் இறங்கு நிலைக்கு வந்தார். அவரின் நாவல் நடை, வெறும் உரைநடை. நாவல் நடையில், வித்தியாசத்தைக் காட்ட முடியாத யாரும் நிலைத்து நிற்க முடியாது என்பது கடந்தகாலப் பாடம். இந்த நடையை யதார்த்தநடை எனக் கூறலாம். யதார்த்த நடைக்கும் யதார்த்த நாவலுக்கும் தொடர்புண்டு.

## நடப்பியல் அல்லது யதார்த்தம்

யதார்த்தவாதம் திடீரென்று முளைத்ததன்று. அதன் வரலாறு இருநூற்றாண்டுகளை உள்ளடக்கியது. அதை ஆராய வேண்டுமானால், அதற்கு முன்னுள்ள கற்பனா வாதத்தை அறிய வேண்டும். யதார்த்தவாத எதிரிகள் கூறுவதுபோல, யதார்த்தவாதம் எளிதில் தூக்கி எறியப்படக் கூடியதல்ல.

கற்பனாவாத இலக்கியங்கள் ஒருவித கனவுநிலையில் உண்மைகளை மறைத்து வர்ணங்களைப் பொழிந்தபோது அதன் மாற்றுச் சக்தியாக யதார்த்தவாதம் உருப்பெற்றது. கற்பனாவாத இலக்கியவாதி உண்மை நிலைகளைக் காட்டாமல் தப்பித்துப் போகிறான் என்ற குற்றச்சாட்டின் விளைவே யதார்த்தவாதம். கற்பனாவாதம் உண்மையைக் காட்டாமல் தப்பித்துக் கொண்டமையால் 'தப்பித்தல் வாதம்' தோன்றியது. கற்பனாவாதியின் கொள்கை 'தப்பித்தல்' என்று உறுதி செய்யப்பட்டது. உண்மையைக் காட்டப் பயந்து, தப்பித்துப் போகவே அவன் கனவு நிலையில் நிற்கிறான் என்ற கருத்துவாதம் உறுதிபெற்றது. பாரதியின் 'ஞானரதம்' கற்பனாவாதத்தில் தப்பித்துக் கொள்ளும் உத்தியே.

இந்தக் கற்பனாவாதத்தை எதிர்த்துத் தோன்றிய - உண்மையை அப்படியே கூறுதல் - என்ற இலக்கிய உத்தி யதார்த்த வாதமாக அறியப்பட்டது.

யதார்த்தவாதத்துக்கு யதார்த்த நடை உதவியது. கதைமாந்தர்கள் கற்பனா உலகத்திலிருந்து கடன் வாங்கப் படாமல், நடப்பியல் உலகிலிருந்து

கண்டுபிடிக்கப்பட்டார்கள். அதாவது, கதைமாந்தர்கள் உருவாக்கப் படவில்லை; கண்டெடுக்கப்பட்டார்கள்.

கண்டெடுக்கப்பட்ட கதைமாந்தர்களின் வாழ்க்கை பேசப்பட்டது. அந்த வாழ்க்கைக்குக் காரணம் ஆராயப்பட்டது. சமூகம் விமரிசனப் பார்வைக்கு உட்படுத்தப்பட்டது. எனவே, விமரிசன யதார்த்தவாதமாக வளர்ந்தது. அதோடு நிற்காமல் சமூக அல்லல்களுக்கு மாற்று வழியாகச் சம உடைமை புகுத்தப்பட்டு 'சமஉடைமை யதார்த்தவாதமா'க வளர்ந்தது. இது அறிவியல் பூர்வமான வளர்ச்சி. இதில் போலித்தனங்களோ, வேஷங்களோ இல்லை. யதார்த்தவாத இலக்கியங்களை, மனிதாபிமான மில்லாதவன் படைக்க முடியாது. மனிதாபிமான யதார்த்தவாதம் என்பது யதார்த்தவாதத்தின் அடிப்படை.

இனி, யதார்த்தவாத இலக்கியத்துக்கான வரலாற்றுச் சூழல் இருந்தாலொழிய, யதார்த்தவாதப் படைப்புகள் உருவாவதைத் தடுக்க முடியாது. அதை எதிர்த்து, அத்தகைய சூழலில், இன்னொருவகையான படைப்பு தோன்றி நிலைநிற்கவும் முடியாது.

ஈழநாட்டு வரலாற்றை அறிந்து கொண்டால் அந்த உண்மை எளிதில் புரியக்கூடும். 1940 ஆம் ஆண்டைத் தொடர்ந்து ஈழம் மண்வாசனைக் கதைகளைப் பிரசவித்தது. முருகானந்தம், இளங்கீரன் போன்றவர்கள் தொடங்கி வைத்த மண்வாசனை யதார்த்தம், 1960க்குப்பின் விமரிசன நிலைக்கு வளர்ந்தது. அதற்கான வரலாற்றச் சூழல், பசி, பட்டினி, மட்டுமல்லாது சாதிக் கொடுமைகளும், பாலியல் கொடுமைகளுமாகும்.. இந்த நிலையில் புரட்சிக்கான விதை விழுந்தது. டானியலின் யதார்த்த நாவல்கள், 'போராளிகள் காத்திருக்கிறார்கள்' 'பஞ்சமர்' போன்றவை சமூக விமரிசன நாவல்களாகப் பிறந்தன. டேனியல் மண்வாசனையை யதார்த்தவாதத்தோடு பிணைத்து, சமூக விமரிசன நிலையில் நாவல்களை வெளியிட்டார் இவரின் நடை யதார்த்த நடையாக, உரைநடையில் ஒரு வித்தியாசத்தை நிலைநாட்டியது. கீழ்ச்சாதி மக்களின் அவலங்களை யதார்த்தமாகக் காட்டியவர் டானியல். அதைக் காட்டுவதற்கான அனுபவம் அவருக்கிருந்தது. காரணம் அவரே கீழ்ச்சாதியைச் சார்ந்தவர் என்பதுதான். இதனால் கற்பனை தேவையற்றதாகியது. பாட்டன் பூட்டன் கால வரலாற்றைக்கூட இணைத்துக் கதை சொல்ல முடிந்தது. அவரின் ஏக்கமே கதையாகியது. இதனால் மேல்சாதி வாழ்க்கை ஒரு வகையான விமரிசனத்துக்கு உட்பட்டது. மேல்சாதி விமரிசகர்களால் குறைத்து மதிப்பீடு செய்யப்பட்டார் என்று கூறலாம். ஆனால் அவரின் யதார்த்தநிலை யாராலும் நிராகரிக்கப்படவில்லை.

முக்கியமாக டானியலின் 'கானல்' நாவல் நினைக்கத்தக்கது. அது மதமாற்றத்துக்கு எதிராக எழுதப்பட்ட நாவல். சாதித் தாழ்வுக்கு எதிராக மதமாற்றம் 'கானல் நீர்' என்பதைக் 'கானல்' நாவல் எடுத்துக் காட்டிற்று.

## தமிழகத்தில் கிறித்தவப் பின்னணி

தமிழகத்தில், குறிப்பாகக் குமரி மாவட்டத்தில் தோன்றிய ஒருசில நாவல்களை அணுகுவதற்கு முன்னால், தமிழகத்தின் ஒரு காலகட்ட சமய வரலாற்றைத் தெரிந்து கொள்வது அவசியம்.. ஒரு நாவல் தோன்றுவதற்கு, வரலாற்றுப் பின்னணி காரணமாகிறது எனலாம். தமிழகத்தில் கிறித்தவம் தோன்றுவதற்கு முன்னால் இருந்த வரலாற்றுப் பின்னணி நிச்சயம் அறியப்படல் வேண்டும்.

கிறித்தவம் காலூன்றுவதற்கு முன்னால் தமிழகத்தில் பாரம்பரிய இந்து சமயம் தழைத்திருந்தது. இந்து சமயம் சாதீயப் பின்னணி கொண்டது. கீழ்ச்சாதி, மேல்சாதி பகுப்புமுறை இந்து சமயத்தின் கூறுபாடாக இருந்தது. இது சமயத்தின் குறைபாடல்ல. சமயத்தைக் கைக்குள் வைத்திருந்த மனிதர்களின் குறைபாடு.

இந்து சமயத்தின் இருவித வழிபாடுகளான, முழுமுதல் கடவுள் வழிபாடு, சிறுதெய்வ வழிபாடு என்ற இரண்டு வகை வழிபாடுகளில் முழுமுதல் கடவுள் வழிபாடு உயர்சாதிக்குரியதாக இருந்தது. சிறுதெய்வ வழிபாடு கீழ்ச்சாதிக்குரியதாக இருந்தது. வேறுவகையில் சொல்வதா யிருந்தால், முழுமுதல் கடவுள் வழிபாடு கீழ்ச்சாதியினருக்கு மறுக்கப்பட்டது எனலாம். இங்கு நந்தனார் வரலாற்றை எடுத்துக்காட்டலாம். நந்தனாருக்கு தில்லைக் கோயிலுக்குள் செல்ல அனுமதியில்லை. மீறிச் சென்றபோது முடிவு வேறாயிருந்தது. கண்ணப்பனின் சிவபக்தியை, உயர்சாதிப் பிராமணனுக்குக் காட்ட, சிவபிரானே இடையிட வேண்டியதாயிற்று. சேக்கிழாரின் சமரச முயற்சியான பெரியபுராணம், கீழ்ச்சாதிப் பிளவுகளை வேரறுக்கவில்லை என்பதே உண்மை. கீழ்ச்சாதியினர் படைத்த இலக்கியங்கள் அங்கீகரிக்கப்படவில்லை; திருமூலரின் திருமந்திரம் அங்கீகாரம் பெறப் பிராமணனின் கூடுவிட்டுக் கூடு பாயும் கதை அவசியமாயிற்று. புராணப்படுத்தல் இங்கு ஒரு உத்தியாக நுழைந்தது.

உயர்சாதியினரின் கொடுங்கோன்மை கொடிகட்டிப் பறந்த காலத்தில் சிவனின் மேல் உரிமை கொண்டு குறவஞ்சி எழுந்தது. சிவனையும், திருமாலையும் உரிமையாக்கிப் பள்ளு பிறந்தது. ஏக்கங்கள் ஓரளவுக்கு இலக்கியங்களால் ஈடு செய்யப்பட்டன.

இத்தகைய ஒரு சூழ்நிலையை எபிரேய இலக்கிய வகைகளிலும் காணமுடிகிறது. பரமபிதா யூதர்களுக்கே உரிய கடவுளாகக் காட்டப்பட, அதை மீறி 'யோனா'வின் சிறுகதை எழுந்தது. பிற சாதிகளைக் கடவுள் அங்கீகரிக்கிறார் என்ற சொல்ல இத்தகைய படைப்புகள் உதவின. ஆனால் நடைமுறை வாழ்வில் கீழ்ச்சாதியினர், சிறுதெய்வ வழிபாட்டிலிருந்து திரும்பி முழுமுதற் கடவுளை அடைய முடியவில்லை.

## குமரி மாவட்டச் சூழ்நிலை

குமரி மாவட்டம் திருவாங்கூர் மாநிலத்தோடு இணைந்திருந்த காலம், மேல் சாதியினரின் மேலாண்மைக் காலம்.. இங்கே நாயர்களின் கலாச்சாரம் மேல் துணி அணியாக் கலாச்சாரம். ஆண்கள் மட்டுமல்ல பெண்களும் கூட மேல் துணி அணிவதில்லை. இதன் தாக்கம் கீழ்ச்சாதி மக்களையும் பாதித்தது.

கீழ்ச்சாதி மக்கள். மேல் துண்டு அணியக்கூடாது; துண்டை இடுப்பில் கட்டிக் கொள்ள வேண்டும். கீழ்ச்சாதிப் பெண்களின் மார்பு வளர்ச்சி கணக்கிடப்பட்டு 'முலை கரம்' விதிக்கப்பட்டது.

நிலபுலன்கள் மேல் சாதிக்காரர்களின் கைவசமிருந்தன. அவர்களின் நிலப்புலன்களில் கீழ்ச்சாதியினர் அடிமைத் தொழில் செய்தனர். சிவன் கோயில்களும், விஷ்ணு கோயில்களும் கீழ்ச்சாதியினரை அனுமதிக்க வில்லை. எனவே, கீழ்ச்சாதியினர் சிறுதெய்வ வழிபாட்டை மட்டுமே வைத்திருந்தனர். இந்தச் சூழலில் சிறுதெய்வங்கள் தொடர்பான பாடல்கள், வில்லுப்பாட்டுகள், கதைப்பாடல்கள் தோன்றின.

மயிலாடியில், சிறு தெய்வ வழிப்பாட்டிலிருந்த வேதமாணிக்கம் என்பவர் விடுதலை தேடி, பூர்வீக இடமான தஞ்சைக்குப் புறப்பட்டார். தஞ்சையில் அவரின் உறவினர்கள் கிறித்தவர்களாக மாறியிருந்தனர். சிறு தெய்வ வழிபாட்டிலிருந்து முற்றிலும் மாறிப் பரமபிதாவைத் தொழுதனர். கோயில்கள் கட்டப்பட்டிருந்தன; பள்ளிக்கூடங்கள் எழும்பியிருந்தன. அடிமை வாழ்க்கை விலகியிருந்தது.

வேதமாணிக்கம் விவிலியத்தோடு ஊர் திரும்பினார். சமூக விடுதலைக்காகவும். சம உரிமைக்காகவும் ஏங்கிக் கிடந்த மக்களுக்குப் புதிய இறைச் செய்தியை வழங்கினார். தேவாலயம் எழும்பியது. அந்தத் தொடக்கப்பணி விரைவான வளர்ச்சியைப் பெற்றது. மேல்சாதி ஆளுகை அசையத் தொடங்கியது. வேதமாணிக்கத்தின் வேண்டுகோள்படி. தஞ்சையிலிருந்து ரிங்கல் டோப் மயிலாடிக்கு அனுப்பட்டார். புதிய இறைச் செய்தி, மிகுதியான கீழ்ச்சாதி மக்களால் ஏற்கப்பட்டது. பல ஊர்களில் தேவாலயங்கள் எழுந்தன.

மிக முக்கியமாகக் கலாச்சாரப் புரட்சி வெடித்தது. தோள்சிலைக் கலவரங்கள் மூண்டு கீழ்ச்சாதிப் பெண்கள் குப்பாயமும். மார்புச் சேலையும் அணிய அனுமதிக்கப்பட்டனர். நாயர்கள் குப்பாயங்களைக் கிழித்தெறிந்தனர். ஆனால் வெற்றிபெற முடியவில்லை.

ஆங்கிலப் பக்திப் பாடல்கள் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டன. அவை 'ஞானப் பாட்டு'களாகப் பாடப்பட்டன. புதிய திருச்சபை மக்கள் கீர்த்தனைகள் எழுதினார்கள். ஜான் பால்மல் போன்றவர்களைக் குறிப்பிடலாம்.

குமரி மாவட்டத்தில் புதிய நற்செய்தி வேகமாகப் பரவியபோது, சாமிதோப்புக்காரர் முத்துக்குட்டி சாமி என்பவர், நாடார்களின் மதத் தலைவராகத் தம்மை அறிமுகப்படுத்தி மதம் மாறாமல் சமூக விடுதலைக்கான இயக்கத்தை உருவாக்கினார். இவரே 'வைகுண்டராய்' அறியப்பட்டார். நாடார்கள் இடுப்பில் கட்டியிருந்த துண்டைத் தலையில் கட்டுமாறு கட்டளையிட்டார். கிறித்தவத்தின் வேகம் ஓரளவு தணிந்ததாகக் கூறலாம். ஆனால் இவர் பணி தொடங்குவதற்கு முன்னரே, கிறித்தவம், அகஸ்தீஸ்புரம், கல்குளம், விளவங்கோடு தாலுகாக்களில் பெரும்பான்மை பெற்றுவிட்டது. தோவாளை, வெள்ளாளர்களின் கோட்டை; அங்கும் கீழ்ச்சாதியினர் கிறித்தவத்தைத் தழுவினர்.

மேல்சாதி மேலாண்மை அறுபட்டது. நாயர்களின் குடிபெயர்வு இங்குக் குறிக்கப்பட வேண்டும். நிலபுலன்கள் கீழ்ச்சாதி மக்களின் கைக்கு மாறின. எஸ்டேட்டுகளில் நாடார்கள் பெருவட்டர்களாக உருவெடுத்தனர்.

இந்தக் காலகட்டம் புதிய இலக்கியத்துக்கான காலகட்டம். ஆனால், பெரிதாக இலக்கியங்கள் படைக்கப்படவில்லை. இந்தக் காலகட்டத்தில் சிறுகதை, நாவல் வடிவங்கள் முழுமையாக அறிமுகமாகவில்லை. திருச்சபை கால்கொண்டதற்குப் பின் எழுதப்பட்ட 'மீதி இருள்' நாவல் குறைந்த பக்கங்களைக் கொண்டது. அதன் பின்னர் எழுதப்பட்ட ஒருசில நாவல்கள் குறுகிய வட்டங்களோடு நின்று போயின. இவை 1898 ஐத் தொட்ட காலங்கள்.

## மீதி இருள்

'மீதி இருள்' சாதீய எண்ணங்களை எதிர்த்து எழுந்தது. மதம் மாறிய கிறித்தவர்கள் புதிய வெளிச்சத்துக்குள் பிரவேசித்துவிட்டதாகச் சொல்லிக் கொண்டார்களே தவிர, முழுமையாக இருள் அவர்களை விட்டு விலக வில்லை என்பதை இந்தக் குறுநாவல் சுட்டிக்காட்டியது. இன்னும் இருள் மீந்திருப்பதாக நாவலாசிரியர் புலப்படுத்துகிறார். கிறித்தவர்களுக்குள் வேரூன்றிவிட்ட மரபு வழிவந்த சாதீய வேறுபாடுகளை அவர் 'மீதி இருளாக'த் தொட்டுக் காட்டினார். கூடவே, சோதிடம் பார்த்தல், பில்லி சூனிய நம்பிக்கை, ராகுகாலம், நல்லகாலம் பார்த்தல் போன்ற மீதி இருளின் பரிமாணங்களைச் சுட்டிக்காட்டி, கிறித்தவம் இந்த மக்களின் சிறு தெய்வ வாசனைகளை வேரறுக்கவில்லை என்பதை நிறுவுகிறார்.

இத்தகையப் 'பழங்குடி மனம்' நீங்காத நிலையில் புதிய வெளிச்சம் என்பது போலி விளம்பரமாகவே நாவலாசிரியர் அருமைநாயகத்துக்குத் தோன்றியதில் வியப்பில்லை. இந்த நாவல் 1986 இல் வெளியானது.

இது, வரலாற்றுப் பூர்வமான ஒரு உண்மையைத் தெளிவாக்குகிறது. கிறித்தவ மதம், இந்து மதத்தின் சாதீயக் கொடுமைகளால் வேரூன்றியதே

தவிர, அது புதிய சாதீய எதிர்ப்புக் கலாச்சாரத்துக்கு இடம் தரவில்லை. வேறு வகையில் கூறினால், சிறுதெய்வ வழிபாட்டிலிருந்து கிறித்தவம் பெருந்தொகையான மக்களை மீட்டெடுத்ததே தவிர, சிறுதெய்வ நம்பிக்கைகளை முற்றிலும் அழித்துவிடவில்லை. சிறுதெய்வப் பாதிப்பு கிறித்தவர்களை விட்டு நீங்கவில்லை என்பதை மீதி இருள் மறைமுகமாகச் சுட்டியது எனலாம்..

அப்படியானால், கிறித்தவம் இந்த மண்ணில் சாதித்தது என்ன? முழுமுதற் கடவுளை வழிபட அனுமதிக்கப்படாத மக்களுக்கு, பரமபிதாவை வழிபடும் உரிமையைக் கிறித்தவம் தந்தது. இந்த வகையில் ஏசுவின் சமூக மறுமலர்ச்சிக் கருத்துக்கள், மேல்சாதி மேலாண்மையிலிருந்து ஒருவகையான விடுதலையை வாங்கிக் கொடுத்தது. ஆனாலும் கிறித்தவம் முழுமையான எதிர்க் கலாச்சாரத்தை வெற்றிகரமாக உருவாக்கவில்லை.

இதற்குப் பின்னர் நாவல் இலக்கியத்தில் ஒரு தேக்கநிலையைக் காணலாம். ஆனாலும், இந்தக் காலக்கட்டத்தில் மொழிபெயர்ப்பு நாவல்கள் வெளிவந்தன. இந்த மொழிபெயர்ப்பு நூற்களைப் பற்றி அதிகம் பேச வேண்டியதில்லை. இவை நம் மண்ணிலிருந்து விலகி நிற்பவை.

நம் மண்ணைத் தொட்டு நிற்கிற சில நாவல்களைத் தேர்ந்தெடுத்து அவற்றைப் பல கண்ணோட்டங்களில் ஆய்வது இக்கட்டுரையின் நோக்கம். மேற்குறிப்பிட்ட வரலாற்றுப் பின்னணியில், குமரி மாவட்டத்தில் பிறந்த சில நாவல்களை அணுகலாம். இந்தச் சில நாவல்களைத் தேர்ந்தெடுத்ததன் நோக்கம், வரலாற்று மாற்றக் காலக்கட்டங்களை (TRANSITION PERIOD) இந்த நாவல்கள் குறிப்பிடுகின்றன என்பதுதான். இந்த வகையில் நான்கு நாவல்களை மட்டுமே அணுகமுடிகிறது.

ஒரு புளியமரத்தின் கதை
புத்தம் வீடு
கீறல்கள்
ரப்பர்.

நான்கு வேறுவேறு காலகட்டங்களில் எழுதப்பட்ட இந்த நான்கு நாவல்களும் நான்குவித வரலாற்றுக் காலகட்டங்களை உள்வாங்கியுள்ளன. இந்த வரலாறு, சமூகம் சம்பந்தப்பட்டது.

## ஒரு புளியமரத்தின் கதை

சுந்தர ராமசாமியின் ஒரு புளியமரத்தின் கதை 1959 இல் உருவானது. 'சரஸ்வதி இதழில் தொடராக ஆரம்பிக்கப்பட்டுப் பின்னர் நாவலாக வந்தது. இது கிறித்தவ நாவல் அல்ல.

### வரலாற்றுப் பின்னணி

நாகர்கோயில் புதிய நகராக உருவெடுத்த வரலாற்றுப் பின்னணியை இந்தக் கதை 'தன்மை' பாத்திர முறையில் விவரிக்கிறது.

நாகர்கோயிலின் முதன்மை ஊர்களாக வடசேரி, ஒழுகினசேரி, கோட்டாறு போன்ற ஊர்கள் ஏற்கனவே உருக்கொண்டவை. கிறித்தவம் இந்த ஊர்களை முழுமையாய் தரிசிக்க முடியவில்லை. மிகச் சிறுபான்மை தாழ்த்தப்பட்டவர்களே இந்த ஊர்களில் கிறித்தவர்களானார்கள்.

வடசேரி அபூர்வமான இடம். அங்கு எல்லா சாதிப்பிரிவுகளையும் காணமுடியும். வெள்ளாளர்கள், சாலியர், முதலிமார், பரதவர், ஆசாரிமார் போக மிகத் தாழ்த்தப்பட்ட மக்களும் கூடிக் குலாவிய இடம் - கூடிக்குலாவுமிடம்; சாதிச் சண்டைகள் எந்தக்காலமும் எழுந்ததில்லை. அங்குக் கட்டப்பட்ட கத்தோலிக்க ஆலயம், கோட்டாறு சவேரியார் கோயிலுக்கு முந்தியது. கத்தோலிக்க வெளிநாட்டார் வரவு ஏனோ நெடுங்காலம் தடைப்பட்டுப் போயிற்று.

நாகரம்மன் கோயிலைச் சுற்றிய பகுதியே நாகர்கோயிலாக அறியப்பட்டிருந்தது. அது முதன்முதலில் சமணக் கோயில். பிற்பாடு சைவக் கோயிலாயிற்று. நாகரம்மன் கோயிலுக்கு மேற்கே நெடுஞ்சாலை; அது, திருவனந்தபுரம் - கன்னியாகுமரிப் பாதை. அந்தப் பாதை நாகரம்மன் கோயிலின் மேற்கே கிடந்த குளத்தில் இரண்டாகப் பிரிந்து சென்றது. குளத்தின் நடுவில் திட்டில் பெரிய புளியமரம். முதலில் குளத்தையடுத்த பகுதிகள் சூன்யம்; ஆனால் கொஞ்சக் காலத்தில் வீடுகள் பெருகின; கடைகள் தோன்றின.

அப்போது, மாவட்டம் திருவாங்கூரோடு இணைந்திருந்தது. திருவாங்கூர் அரசர் கன்னியாகுமரிக்கு வருவது வடசேரிப் பாதை வழியாகத்தான். திரும்பிச் செல்வதற்கு வேறு பாதை. அது அப்போது 'ராஜ பாதை' யாக அறியப்பட்டிருந்தது.

புளியமரத்துக்கு மேற்கே நொச்சிக்காடு;

புளியமரச் சந்திப்பு (ஜங்ஷன்) உருவானதற்குப் பின்னர்தான் எதிர்த் திருச்சபையைச் சார்ந்த வெளிநாட்டார் குமரி நாட்டுக்குள் நுழைந்தார்கள். அந்த வரலாறு பின்னர் கூறப்படும்.

### கதை சொல்லும் ஆசான்

புளியமரத்தின் கதையை ஆசான்தான் கூறுகிறார். தாமோதரன் ஆசான் என்று பெயர். ஆசானைச் சுந்தர ராமசாமி வருணிக்கிறார்:

"அவரோடு நாங்கள் பழகிய நாட்களில் அவருக்கு எண்பது வயதுக்கு எல்லாம் குறைவில்லை. கேட்டால், 'அறுபத்தி மூன்று' என்றுதான் பதில் சொல்லுவார். எண்பது வயதாகியும் கல்மாதிரி இருக்கிறாரே என்று பிறர் நினைப்பது அவருக்குப் பிடிக்காது. ஆனால் அறுபத்து மூன்று என்று சொன்னாலும் நம்பும்படியாகத்தான் இருக்கும். அப்பழுக்கில்லை. ஊசியில் நூல் கோர்ப்பார். மூச்சில் நூறு தேங்காய்களை நார் உரித்துப் போடுவது அவருக்குச் சிரமமான வேலை அல்ல....... தோள்கள் இரண்டு நுங்கைத் தூக்கி வைத்தாற்போல் இருக்கும்."-பக்.13.

ஆசான் அடிக்கடி உட்காரும் இடம் சோசப்பின் லாண்டரிக் கடை. சோசப்புக்கு, ஆசான் கூறும் கதைகளில் எது பொய், எது உண்மை என்று தெரியும். சில நேரங்களில் அவன் ஆசானை மடக்கி விடுவதும் உண்டு. ஆனால், ஆசான் மசிய மாட்டார். எது எப்படியானாலும் ஆசானின் கதை சொல்லும் பாணி வித்தியாசமானது. முடிவை முதலில் சொல்லிக் கதை சொல்ல அவருக்குத் தெரிந்திருந்தது. இடை நிகழ்ச்சியை முதலில் தொடங்கிக் கதை சொல்லவும் அவருக்குத் தெரிந்திருந்தது. அவரின் கதை சொல்லுப் புத்தி அலாதியானது.

அவரின் சில கதைகள் புராணப்படுத்தப்பட்டிருக்கும்; அதில் புராணக் கூறுபாடுகள் இருக்கும். செல்லத்தாயின் கதை அத்தகைய ஒன்றுதான். சோசப்பு 'அவ்வளவும் பொய்' என்று சமிக்ஞை காட்டியது ஆசானுக்குக் கோபத்தை ஏற்படுத்தக்கூடியது தான். ஆசான், 'என்னடேய், முதுகுக்குப் பின்னாலே குழி தோண்டுதே' என்று கேட்பதும், அந்தக் கேள்வியால் இன்னொரு கதை உருவாவதும் சலிப்புத்தட்டாத செய்திகளே.

ஆசான் யதார்த்தமாக ஒரு கதையைச் சொல்லிக் கொண்டு வரும் போது, அவற்றுள் சிலவற்றை அவர் பாணியில் புராணப்படுத்திவிடுவது கதைக்குத் தேவையான அம்சமாகவே நிற்கிறது. புராணப்படுத்தல் என்பது நெடுங்காலமாக இந்த மண்ணுக்குரியது. அதிலிருந்து இந்த மண் தப்பித்துக் கொண்டதில்லை. சாதாரண நிகழ்ச்சிகளில் வரும் கதாநாயகனைக்கூட, தேவனாகக் காட்டிக் கதை சொல்லுவதும், திடீரென்று அவன் பாம்பாய் மாறிவிடுவதும், அல்லது மறைந்துவிடுவதும் பாட்டிகளும் கூடக் கையாளும் ஒரு உத்தியாக உள்ளது.

அதுவும், தேவர்கள், மேலிருந்து இறங்கி வந்து, மானுடப் பெண்களைப் புணர்ந்தார்கள் என்ற செய்தி, அற்புதமான புராணப் படுத்தல் மூலம் சுவை பெற்றுவிடுகிறது. ஆசான், செல்லத்தாயியோடு கூடியவன் அப்படிப்பட்ட ஒருவனே என்பதை விகாரமில்லாமல் விவ்ரிப்பது கதைக்குத் தேவையாகலாம். ஆனால் சோசப்பின் விமரிசனப் படி, அது பொய்தான். ஆனாலும், ஒரு ஊரின் கதையை ஓரளவுக்குச் சரியாகவே ஆசான் கூறுகிறார்.

புளியமரத்துக்குப் பல காலமும் ஏற்பட்ட ஆபத்துக்களை ஆசான் கூறுவது வரலாற்றுச் செய்தியே. ஒருமுறை ஆசானே புளியமரத்தைக் காப்பாற்றிய செய்தி சொல்லப்படுகிறது. செல்லத்தாயி புளியமரத்தில் தூக்கிட்டுக் கொண்டதற்குப்பின் பூசாரி ஒருவன் அந்தப் புளியமரத்தை வெட்டுவதற்கு வருகிறான். பெயர் கொப்பளான்; மாடன் கோயில் பூசாரி. ஆசானே கதையை வருணிக்கிறார்-

"நேரே மணிமேடைக்கு வந்து எறச்சகுளம் ஊரானி, பேச்சிக்கு மவன் நட்டுவக்காலி சம்முவம் கடையிலே ஒரு டீயும் குடிச்சிப் போட்டு. ஒரு சுருட்டும் பத்தவெச்சுக்கிட்டு வாற பாதையிலேதான் எனக்கு முன்னுக்கு கொப்ளான் விறுவிறுனு போகுதெக் கண்டேன். தலைமயிரு புசுபுசுனு ஒரு முளம் நெத்திக்க மேலே ஏறிருக்கு; பட்டை பட்டையா விபூதி; நெத்தியிலே கை அகலம் குங்குமப் பொட்டு. இடுப்பிலே, அடிக்க வாறாலே, செவப்புப் பட்டு. தோளிலே கோடாலி........."

புளிக்குளம், புளியமரம் இரண்டும் தூர்க்கப்படாமலும், வெட்டப் படாமலும் இருந்த காலத்திலேயே மணிக்கூண்டு கட்டப்பட்டதாக நாவல் மூலம் அறியமுடிகிறது. மணிக்கூண்டு அல்லது மணிமேடை ரவிவர்மா மகாராஜாவால் கட்டப்பட்டது. அது 1893 ஆம் வருடம். ஆக, புளியமரத்தின் கதை ரவிவர்மாவுக்குப் பிந்தியதுதான். பூசாரி புளியமரத்தை வெட்டிவிடாமல் ஆசான் காப்பாற்றினார். ஆனால் அதற்குப்பின்னரும் புளியமரத்துக்கு ஆபத்து வந்திருக்கலாம். காரணம், புளியமரம் 'தோஷம்' கொண்டதாகவும், சாமியே (மாடன், சங்கிலி போன்ற சிறுதெய்வங்கள்) புளியமரத்தை வெட்டிவிட உத்தரவு கொடுத்ததாகவும் பலரும் நம்பத் தொடங்கியதுதான்.

பூசாரியை ஏமாற்றி, புளியமரத்தில் உக்ரமூர்த்தி குடியிருப்பதாகப் பயமுறுத்தி, கடைசியில், தோஷம் நீங்க, செல்லத்தாயி தூக்குப்போட்ட கிளையை மட்டும் வெட்ட வைக்கிற சாமர்த்தியம் ஆசானின் பூர்வீகச் சொத்து.

கொம்பு தண்ணீரில் மிதக்க, புளியமரம் பிழைத்துக் கொண்டது. மரத்தை வெட்டக்கூடாது என்பது இங்கு ஒரு ஐதீகமாகவே நிற்கிறதாகத் தெரிகிறது. இது ஒருவகைப் பரம்பரைக் குணம். ஒருவேளை மரம் வாழவைக்கிறது என்பதால் அது தெய்வீகமானது என்ற எண்ணமாயிருக்கலாம். தாமோதர ஆசான் மரத்தைக் காப்பாற்றியது ஒருவிதப் பரம்பரைக்குணம் போலவும் தெரிகிறது. ஒரு காலக்கட்ட வாழ்க்கை மரங்களோடு தொடர்பு கொண்டதுதானே. தொழில்கள் பெருகிய பின்னர்தானே மரங்களைக் கொண்டு வாழ்ந்த வாழ்வு மாறியது. இந்த உண்மை இங்குச் சரியாகச் சொல்லப்பட்டதாகக் கூறலாம். ஆனால் புளிக்குளம் தூர்க்கப்படுவதற்கும் ஒரு காலம் வரத்தான் செய்தது.

பூரம்திருநாள் மகாராஜா - இது கற்பனைப் பெயர் என்று தெரிகிறது. திருவனந்தபுரத்திலிருந்து கன்னியாகுமரிக்கு விஜயம் செய்கிறார். ஆசானே இதையும் சொல்லுகிறார்-

"அந்தக் காலத்தில் வருடம் இருமுறை ராஜா கன்னியாகுமரி வந்து சமுத்திர ஸ்நானம் செய்வது வழக்கம். ராஜ விசுவாசம் பெரிதும் ஆட்கொண்டிருந்த காலம் அது.........."

அரசர் தங்குமிடங்களில் குளத்தில் குளிப்பார். அதனால், குளங்களில் புதுநீர் பாய்ச்சியிருப்பார்கள். அரசர் வடசேரியில் தங்கி மீனாட்சிபுரம் வழியாகப் போவார் என்பதால், புளிக்குளத்தின் தண்ணீரை அதிகாரிகள் மாற்றவில்லை. அரசர் ஊர்வலமாக வந்து கொண்டிருக்கிறார். மீனாட்சிபுரத்தில் வடிவம்மன் கோயிலில் மணியடிக்கிறது. அரசர் ரதத்தில் எழுந்து நின்று பக்திப் பரவசமாகிறார். அப்போதுதான் அது நடந்தது. காற்று அசுர வேகத்தில் மேற்கேயிருந்து கிழக்கே அடித்தது. புளிக்குளத்தின் நாற்றத்தையும் கூடவே கொண்டு வந்தது. அரசர் முதலில் அந்த நாற்றத்தைப் பொறுத்துக் கொண்டார். துர்நாற்றம் தொடரவே, அரசரின் முகம் கறுத்தது. 'ரதத்தை விரட்டு' என்று கத்தினார் அரசர். ரதம் வாயு வேகத்தில் பறந்தது.

மறுநாள் கன்னியாகுமரியில் தங்கியிருந்த மகாராஜா உத்தரவு போட்டார். அது அவசர ஆணை. "ஒரு வாரம் கழித்து தலைநகர் திரும்பிச் செல்லும் போது, புளிக்குளம் வழியாகத்தான் திரும்பிச் செல்வேன்" என்று அரசர் தீர்மானித்துவிட்டார். ஒரு வாரத்துக்குள் புளிக்குளத்தைத் தூர்க்க வேண்டும். மனித வெள்ளத்தை எங்கிருந்துதான் இட்டுக் கொண்டு வந்தார்களோ! புளிக்குளத்திலிருந்த தண்ணீரை மடை வெட்டி தேரேகால்புதூர் சானலில் கொண்டு போய்ச் சேர்த்தார்கள். ஒரே நாளில் புளிக்குளம் இந்திய மகா சமுத்திரத்தில் கலந்து விட்டது.

அப்புறம், மருந்துவாழ்மலைச் சாரலிலிருந்த பறையன் குன்றிலிருந்து மண்கொண்டு வந்து குளத்தை நிரப்பினார்கள்.. பறையன் குன்று தரையோடு தரையான போது, புளிக்குளம் இருந்த இடம் தெரியவில்லை. பிறகு, பாதை போட்டார்கள்.. ஆனால் புளியமரத்துக்கு எந்தத் தீங்கும் நேரவில்லை.

ஆசான் கூறிய கடைசிக் கதை இதுதான். அப்புறம் ஆசான் இல்லை. என்ன ஆனார்! சில ஊகங்கள் மட்டுமே கூறப்பட்டன. ஆசான் இலங்கைக்குச் சென்று ஒரு மோசடி வழக்கில் சிக்கிக் கம்பி எண்ணுகிறார் என்பது ஒன்று; காலரா கண்டு கடற்கரையில் இறந்து கிடந்தார் என்பது மற்றொன்று. பக்கத்தில் நின்று கொண்டிருந்தவர்களிடம் 'தெய்வம் இல்லை' என்று உரக்கக் கூறி உயிர்விட்டார் என்பது மற்றொன்று.

அப்புறம்தான் புளியமர ஜங்ஷன் உருவானது. சுற்றிலும் பாதையோரத்தில் கடைகள், ஓட்டல்கள் பிறந்தன. மின்சாரம் அறிமுகமானது. பேருந்துகள் புதிதாய் வந்தன.

ஆக, ஒரு அற்புத மாற்றத்தை அழகாக இயம்புகிறது நாவல். பின்னர்......... புளியமர ஜங்ஷனின் வீழ்ச்சியைக் கூறுவதாகத் தொடங்கி ஆசிரியர் கதையை நீட்டுவதற்குப் பல சம்பவங்களை விவரிக்கிறார்.

ஒன்று, கத்தோலிக்க 'பிஷப்' அரண்மனையில் சிறுபிள்ளைகள் பால் வாங்கிச் செல்வது.

ஆசாரிப்பள்ளம் ரோட்டில் அமைந்திருந்தது பிஷப் அரண்மனை. அப்போது அதன் பெயர் மேற்றிராணியார் அரண்மனை. ஏழைக் குழந்தைகள் சாரி சாரியாகப் பாத்திரங்களுடன் இலவசப்பால் வாங்க காத்திருந்த காட்சி, தாடி வைத்த பாதிரியார், அரண்மனையின் பிரம்மாண்டமான இரும்பு 'கேட்'டைத் திறப்பது; குழந்தைகள் பால் வாங்குவது; அப்புறம் இளம் தோட்டிகள், தோட்டிச்சிகள் பற்றிய வருணனை; புளியம்பழம் பறிப்பது; புளியமரம் ஏலம் போகாமல், பழங்கள் இல்லாததால் நகரசபையில் புகார் கொடுத்தல்; நகரசபைக் கட்டடம், அதன் பூர்வீகம் என்று கதை நகர்த்தப் படுகிறது.

அப்புறம் அப்துல் காதர், தாமு இரண்டு பேரின் வியாபாரப் போட்டி, சண்டை சச்சரவுகள், வழக்குகள் என்று கதை போகிறது. தாமுவை உயர்ந்த பாத்திரமாக உருவேற்ற எண்ணித் தோற்றுப்போகிறார் ஆசிரியர். சுருங்கச் சொன்னால் ஆசானின் சாவோடு கதையும் செத்து விட்டது.

டி.சி. ஜோசப்பை, கதையில் எம்.சி. ஜோசப்பாக்குகிறார் நாவலாசிரியர். அவர் நகரசபைத் தலைவர். கைவசம் பத்திரிகை, 'திருவாங்கூர் நேசன்'; எழுத்துக்கு இசக்கி.

நகரசபைத் தேர்தலில் தாமு எதிர்த்துப் போட்டியிடப் போவதாக வதந்தி. தேர்தலுக்கே உரிய சதி வேலைகள். புளியமரத்தை வெட்டி விட்டால் தாமுவின் கடையில் நிழல் போய்விடும். வியாபாரம் படுத்துவிடும் என்ற சதி எண்ணங்கள். ஆனால் தாமு புளியமரத்தைத் தெய்வமாக்கி இந்து மதத் தலையீட்டுக்கு வழிவகுத்தபோது, புளியமரத்தை யாரும் தொட முடியவில்லை.

ஆனால், புளியமரத்தில் பாதரசத்தை விட்டகூலி ஐயப்பன் குத்தப்படுகிறான். புளியமரத்தை யாராலும் காப்பாற்ற முடியவில்லை.

உண்மையில் புளியமரம் தானாகவே பட்டுப் போனது. அது முதுமையான மரம் என்பதை ஆசிரியர் முதல் அத்தியாத்திலேயே, "வயதான மரம். கிழடு தட்டிப் போய்விட்டது. எட்டி நின்று சிறிதுநேரம்

பார்த்துக் கொண்டிருந்தால், பஞ்சு பொதியாகி கண்களும் பஞ்சடைந்து, கூனிக் குறுகிப் போன கிழவி நிஷ்காம நிலையில் ஆழ்ந்து தன்னுள்ளே புதையுண்டிருக்கும் ஆனந்தத்தைத் தேடியெடுத்து அனுபவித்துக் கொண்டிருப்பது போல்தான் இருக்கும்."-பக்.9.

அப்புறம் எவ்வளவு காலம் கதை போகிறது! ஆசானும் செத்தாகி விட்டது; புளியமரம் சாகக்கூடிய வயது. கதையை நகர்த்திச் செல்ல, நகரசபை அரசியலை இழுத்தடித்து, எம்.சி ஜோசப்பை முன்னிறுத்தி, கடைசியில் கூலி ஐயப்பனின் பாதரசத்தால் புளியமரத்தை வீழ்த்தியிருக்க வேண்டாம்.

ஆனால், ஒன்று மட்டும் உண்மை. ஒரு ஊர் அல்லது ஒரு சந்திப்பு அதனைச் சுற்றிய பகுதிகள் நகரமாகவும், ஜங்ஷனாகவும் உருமாறிய மாற்ற காலகட்டம் கதையில் சொல்லப்படுகிறது. இது ஒரு செய்திப்படக் கதை மட்டுமே. ஒரு வேளை முழுமையடையாத கதையாகவோ செம்மை பெறாத கதையாகவோ கூடக் கொள்ளலாம்.

ஆனால், இதுதான், பின்னர் எழுதப்பட்ட வெற்றிகரமான மூன்று நாவல்களுக்குக் காரணமாய் நிற்கிறது என்பது உண்மை.

ஒரு புளியமரத்தின் கதை சோசப்பு என்ற ஒரு லாண்டரிக் கடைக்காரரை அறிமுகப்படுத்தி விட்டுக் கவனமாக, ஆசானை முதன்மைப் படுத்திக் கதையை வளர்த்தது. ஆனால் சோசப்பு, அப்புறம் வளர்ந்த ஒரு மாற்றத்தின் பிரதிநிதி என்பதை ஆசிரியரே அறியவில்லை.

அந்த மாற்றத்தை, அல்லது, மாற்ற காலகட்டத்தை உள் வாங்கி எழுதப்பட்ட நாவலே எப்சிபா ஜேசுதாசனின் 'புத்தம் வீடு'.

### புத்தம் வீட்டின் பின்னணி

1964 இல் வெளி வந்த எப்சிபா ஜேசுதாசனின் 'புத்தம் வீடு' நாடார் கிறித்தவர்களின் வாழ்க்கை பற்றியது. முற்றிலும் கிறித்தவப் பின்னணி கொண்ட இந்தக் கதையை ஆய்வு செய்வதற்கு முன் ஒருசில வரலாற்றுண்மைகளை அறிய வேண்டியுள்ளது. அந்த வரலாறு புதிய ஓர் (மாற்றுக்) காலகட்ட வரலாறு. இந்த வரலாற்றைச் சமூகப் பின்னணியில் நோக்கலாம்.

### வரலாற்றுப் பின்னணி

1600 இல் ஆங்கிலேயர் வர்த்தகத்துக்காக இந்தியாவுக்கு வருகிறார்கள். உள்ளே நுழைந்த பின்னர்தான் - இந்தியாவில் சாதி, மத, மொழி, இன வேறுபாடுகளைப் புரிந்து கொள்ளுகிறார்கள். துண்டு துண்டாகக் கிடந்த இந்தியாவை எளிதில் படைபலத்தால் பிடித்துக் 'காலனி'

ஆட்சி நிறுவிவிடலாம் என்று அவர்களுக்குத் தோன்றியது. அதை நிறைவேற்றிக் கொண்டார்கள்.

இந்தக் காலனி ஆட்சியைச் சாதகமாக்கிக் கொண்டு எதிர்ச்சபை (PROTESTAND) மிஷனரிகள் இந்தியாவுக்குள் காலடி வைத்தார்கள். இவர்கள் காலடி வைப்பதற்கு முன்பே கத்தோலிக்கத் திருச்சபைகள் பல இடங்களில், குறிப்பாகத் தென்னிந்தியாவில் உருவாகியிருந்தன என்பதை முன்னரே கூறினோம்.

எதிர்ச்சபை மிஷனரிகள் பெரும்பாலும் ஆங்கிலேயர்கள் அல்ல; செர்மன் மற்றும் அதைச் சுற்றிய பகுதிகளைச் சார்ந்தவர்கள். அவர்கள் பணிக்களமாக எடுத்துக் கொண்ட இடங்கள் கீழ்ச்சாதியினர்களின் இடங்கள். இதன் அடிப்படை என்னவென்றால், மக்களின் சாதீய வேறுபாடுகளை அறிந்து கொண்டு, எங்கே மிஷனரி பணி வேர் கொள்ளுமோ அங்கே பணி செய்தார்கள்.

மேல்சாதி, முழுமுதல் கடவுளோடு (ALMIGHTY GOD) தொடர்பு கொண்டது; கீழ்ச்சாதி சிறுதெய்வத்தோடு (LOCAL DEITY) தொடர்பு கொண்டது என்பதை முன்னரே சுட்டினோம்.

'ஒரு புளியமரத்தின் கதையில் உருவாகிற நாகர்கோயில், நாடார்களை உள்ளடக்கியே உருவாகிறது. அதைப் புளியமரத்தின் கதை நிராகரித்து விட்டது; அல்லது ஆசிரியருக்கு அது தேவையற்றதாயிருந்திருக்கக் கூடும்.

உண்மையில் பூர்வீக நாகர்கோயில், பழையாற்றின் கரையோடு ஒட்டி நீண்டிருந்தது. அது ஆற்றங்கரை நாகரிகம். இங்கெல்லாம் நாடார்கள் இல்லை. நாடார்கள் பாண்டிய நாட்டிலிருந்து வந்து குடியேறியவர்கள். முக்கியமாகச் சாத்தான் குளத்திலிருந்தும், திருச்செந்தூரிலிருந்தும் கடற்கரையோரமாக ஊடுருவியவர்கள். முதலில் கடற்கரைப் பகுதிகளில்தான் வாழத் தொடங்கினர். பிற்பாடுதான் உள்ளூர்கள் உருவாயின.

நொச்சிக்காடாயிருந்த பெரும்பகுதிகள் திருத்தப்பட்ட குடியிருப்பு களாக மாறின. மன்னராட்சிக்காலம், நாடார்கள், நாயர்களின் மோதல் காலம். மிஷனரிகளின் வருகை நாடார்களின் பொற்கால்லம். காரணம் ஒட்டு மொத்தமாக நாயர்களிடமிருந்து நாடார்கள் பாதுகாக்கப்பட்டது அந்தக்காலம்தான்.

மேல்சாதி நாயர்களாலும், வேளாளர்களாலும், பிராமணர்களாலும் முற்றிலும் ஒடுக்கப்பட்டு நசுக்கப்பட்டிருந்த நாடார்கள் பாதுகாப்புக்காய் மதம்மாறினார்கள் என்பது வரலாற்றடிப்படையில் குற்றமாகாது. அது கட்டாயமாயிருந்தது. கிறித்தவத் திருச்சபை தோன்றிய பின்னர் அவர்களுக்கு இன்னும் பாதுகாப்புக் கிடைத்தது.

இந்தப் பின்னணியில், விளவங்கோட்டுத் தாலுகாவிலுள்ள பனைவிளை கிராமத்தில் ஒரு கிறித்தவக்குடும்பத்தின் கதையே 'புத்தம் வீடா'க மலர்கிறது. கதை இப்படித் தொடங்குகிறது.

"பனைவிளையில் கண்ணுக்கு எட்டும் தூரம் எல்லாம் ஒரே பனைமரக்காடு. இடையிடையே ஓலைகளின் சலசலப்பு.........." ஆக, நிச்சயமாக இது நாடார்களின் கதை என்பதை உறுதி செய்து விடலாம்.

கன்னியாகுமரி மாவட்டத்தில் கிறித்தவம் தழைத்த பின்னர், மதம் மாறி கிறித்தவர்களாக வாழ்க்கையை ஆரம்பித்த நாடார்களின் வாழ்க்கைப் பின்னணியே கதை. அதுவும் கிறித்தவ வாழ்க்கை ஏதோ ஒருவித வறட்சிக்குத் தாவிய நிலையில் கதை விரிக்கப்படுகிறது. ஆக, கிறித்தவம், ஆரம்பக் கட்டம், வளர்ச்சிக் கட்டம், உயிரற்ற கட்டம் என மூன்று கட்டங்களைக் கொண்டதாகத் தெரிகிறது.

ஆரம்பக் கட்டம் சிறப்பானது. ஒரு வேளை கிறித்தவ மொழியில் கூறுவதனால் ஆவிக்குரிய நிலை. வளர்ச்சிக் கட்டம் திருச்சபையின் வளர்ச்சி, அமைப்பாக வளர்ந்த கட்டம். இந்த வளர்ச்சியே பொதுவான வீழ்ச்சிக்குக் காரணமாகும். 'அமைப்பு' என்பது கசப்பான ஒரு வரலாறுதான். காரணம், திருச்சபையின் விண்ணரசு குறிக்கோளை அது திசை திருப்பி விட்டது எனலாம். வேறுவகையில் கூறிவதனால், கிறித்தவத்தின் இலட்சியம், குறிக்கோள் - அதிகார வர்க்கத்தின் பிடியில் சிக்கி மதம் சுயத்தை இழப்பதற்குக் காரணமாகியது. ஆக, கிறித்தவம் இன்னொரு வர்க்கமாகத் தன்னை அடையாளங்காட்டத் தொடங்கிய காலக்கட்டமே இது. இதனால் பல இடங்களில் திருச்சபை உயிரற்ற நிலையில், மூன்றாம் கட்டத்துக்குத் தாவியது.

"பனை விளையில் ஒரு சிறிய கிறித்தவக் கோயில் இருக்கிறது. ஞாயிற்றுக் கிழமைகளில் கிறித்தவர்கள் ஆராதனைக்குப் போகுமிடம். ஆரம்பக் காலங்களில் பக்தி உணர்ச்சியும் உயிர்த்துடிப்புமாயிருந்த எத்தனையோ கோயில்கள் நாளடைவில் அனல் அவிந்து, உயிரற்றுப்போகவில்லையா? அந்த ரகத்தைச் சார்ந்ததுதான் இந்தக் கோயிலும். லௌகீகம் பலத்து ஆன்மீகம் குன்றிவிட்டது. பழக்கம் காரணமாக இப்போதும் ஒரு சிலர் ஆராதனைக்குப் போகிறார்கள். விவாகம், மரணம், ஞானஸ்நானம் போன்ற காரியங்களுக்குத் தகுந்த சடங்குகள் நடந்து வருகின்றன. காணிக்கையும் ஓரளவு சேரத்தான் செய்கிறது. கிராமத்திலுள்ள பெண்களுக்கு ஒருவரை ஒருவர் சந்திக்கவும், சுக செய்திகளை விசாரிக்கவும், இது சந்தர்ப்பமளிக்கிறது." (பக்.33)

மிக முக்கியமான ஒரு காலகட்டத்தைக் கதை தொட்டுக் காட்டுகிறது. திருச்சபையின் பேரால் முழுமுதல் கடவுள் வணக்கத்துக்கு வழி

கிடைத்துவிட்டது. ஆனால் கிறித்தவம் அமைப்பாக மாறிய பின்னர் ஒருவித வீழ்ச்சி நிலையைச் சந்திக்கக் கூடிய காலக்கட்டத்தையடைகிறது. ஆனாலும், அமைப்பு உறுதியாகவே இருக்கிறது. அது அசைக்கமுடியாதது. அங்கே, ஆதீனத்தலைவர்கள், நிர்வாக உறுப்பினர்கள், ஆட்சிக் குழுக்கள் எல்லாம் பிரம்மாதமான வளர்ச்சிக்குக் கட்டியம் கூறுகின்றன. ஆனால், அனைத்தும் கிறித்தவத்தை விட்டு விலகி நிற்கின்றன. தியாகத்தையும், தொண்டையும் அடித்தளமாகக் கொண்ட கிறித்தவம் மேல் மட்டத்தில் ஆடம்பரத்தை நோக்கி நகர்ந்து விட்டது. இதன் பாதிப்புப் பல கோயில்களில் தெரிகிறது. ஊர்களை உன்னத வாழ்வுக்கு உயர்த்த வேண்டிய பணி முடங்கிவிட்டது.

இந்த நிலையில், இந்த யதார்த்த நாவல் எழுகிறது. எழ வேண்டியது கட்டாயமாகிறது. இந்த 'உயிரற்ற' வீழ்ச்சி நிலையைச் சொல்ல யதார்த்த உத்தியை விட்டால் வேறு உத்திகள் இல்லை. கோயில் அமைப்பிலுள்ள தவறுகள் தெளிவாகச் சுட்டப்பட்டுள்ளன. புத்தம் வீட்டுப் பெரியவர் கோயிலில் மூப்பர் (டீக்கனார்).

"கோயிலில் மூப்பர்களில், ஒருவர் புத்தம் வீட்டுப் பெரியவர் என்று சொன்னோம். அவரை டீக்கனாராக வைத்திருப்பதற்கும், பழக்கந்தான் காரணமென்று சொல்ல வேண்டும். அவரை கௌரவிப்பதற்காக அவர்கள் அளித்த ஸ்தானம் அது. அல்லாமல் அந்த ஸ்தானத்துக்குரிய எந்தவிதமான தகுதியும் அவருக்கிருந்ததாகச் சொல்ல முடியாது........" (பக்.31) அப்புறம் கோயில் உபதேசியாரும் அப்படித்தான். "பாவம் அவர் ஒரு பாமர மனிதர்" - (பக்:31)

இதன் அர்த்தம்தான் என்ன? 'பாமர மனிதன்' என்பதைக் கிறித்தவத்துக்குத் தூரமான மனிதன் என்று கொள்ளலாமா? அப்படித்தான் கொள்ள வேண்டியுள்ளது. இனி, புத்தன் வீட்டின் சில செய்திகளை அறியலாம்.

**கண்ணப்பச்சி**

"சூழ்நிலை இது; இதன் நடுவிலே ஒரு பழைய பெரிய வீடு; ஆனால் ஊர்க்காரர்கள் அதைப் 'புத்தம் வீடு' என்று குறிப்பிடுவார்கள். அதில் வாழ்பவர்களுக்கு ஏற்றபடிதானோ என்னவோ, அது பரந்து விரிந்து, ஆனால், சீர்குலைந்து கிடக்கிறது. ஓடிட்ட கட்டடம்; இந்தக்குக்கிராமத்தில் ஒடு போட்ட வீடென்றால் இலேசான காரியமா? வீட்டுக்கு முகப்பாக ஒரு 'அடிச்சிக் கூடு', வெயிற் காலத்துக்கு ஒதுக்கிடமாகக் கட்டப்பட்ட இதை மட்டும் ஓலை வேய்ந்திருக்கிறார்கள்..............

"வீட்டின் பெரியவர் அடிச்சுக் கூட்டில் இரண்டு பெஞ்சுகளைச் சேர்த்துப் போட்டு, அவற்றின் மேல் ஒரு பெரிய அழுக்குப் படிந்த தலையணையை வைத்துக் தூங்குகிறார்". (பக்.12)

இவர்தான் கண்ணப்பச்சி. பரந்த பெரிய வீடு இவருக்குரியது....... பழைய காலம் சிறப்புடையதாய் இருந்திருக்க வேண்டும். பெரிய வீடு என்பதால் கூட்டுக்குடும்பம். இரண்டு ஆண்பிள்ளைகளும் குடும்பமாக அதே வீட்டில்தான். மூத்தவன் குடிகாரன்; கள்ளுக்கடைக்குப் போகாமல் வீட்டுப்படியேறுவதில்லை. அவன் வருகிறபோது கண்ணப்பச்சி, காறித்துப்புவார்.

இளையவன் கூட மனைவியோடு அங்கேதான் குடித்தனம். இவன் பரவாயில்லை. ஆனால், கோயில் மூப்பரான கண்ணப்பச்சிக்கு மொத்தத்தில் குடிகார மகனால் பிரச்சினை, மனச்சஞ்சலம், கௌரவக் குறைச்சல் எல்லாம்.

இவை தோற்றுவாய்.

**லிசி**

கதை லிசியை வைத்துதான் பின்னப்பட்டிருக்கிறது. குடிகார மூத்தவனின் மகள் லிசி. அவளின் பத்தாவது வயதிலிருந்து கதை தொடங்குவதாகத் தெரிகிறது.

"இந்தச் சிறு பெண்தான் லிசி: குறுகுறுத்த கண்களும், சிரித்த முகமும், துள்ளுநடையும், மாநிற மேனியுமுள்ள இந்தச் சிறுமிக்கு வயசு பத்து இருக்கும். அவள் தாயார் அவளிடம் தினம் தினம் சொல்லுவாள், "குட்டி நீ பெண்ணாக்கும்!" லிசி பள்ளிக்கூடம் போகிறாள். அங்கு அறிமுகமாகிற சிறுவன் தங்கராஜ் - இந்தக் கதை ஒரு காதல் கதையாக மட்டும் இருக்குமோ என்ற சந்தேகத்தை எழுப்புவதற்குக் காரணமாக இருக்கிறான். அப்படித்தான். ஆனால், நிச்சயம் காதல் கதையை மட்டும் சொல்வதற்கு இந்த நாவல் எழுதப்படவில்லை என்று தெரிகிறது. இனிக் கதை நகர்வது, இப்படி -

"வருஷங்கள் எப்படித்தான் ஓடிவிடுகின்றன. வாழ்க்கை முறைதான் எப்படி எப்படி மாறிவிடுகிறது. சுயேச்சையாக ஓடியாடித் திரிந்து, நெல்லி மரத்தில் கல்லெறிந்து, குளத்தில் குதித்து நீச்சலடித்து, கூச்சலிட்டுச் சண்டை போட்டு, கலகலவென்று சிரித்து மகிழ்ந்து, எப்படி எப்படியெல்லாமோ இருந்த ஒரு குழந்தை பாவாடைக்கு மேல் ஒற்றைத் தாவணி அணிந்து கொண்டு, கதவு மறைவில் பாதிமுகம் வெளியில் தெரியும்படி குற்றவாளி போல் எட்டிப் பார்க்கிற பரிதாபத்துக்கு இத்தனைச் சடுதியில் வந்து விடுகிறதே - இந்த வாழ்க்கைத் திருவிளையாடலை என்னவென்று சொல்வது!" (பக்:35)

லிசி மாறிவிட்டாள்; இல்லை மாற்றப்பட்டுவிட்டாள். பருவமடைந்ததே காரணம். அதனால், இப்படித்தானா! நிச்சயம் அந்தச் சமுதாயத்தில் அப்படித்தான். ஆசிரியை கூறுவதைக் கவனியுங்கள்; "லிசி பெரிய வீட்டுப்பிள்ளை என்பதை நீங்கள் அறிய வேண்டும். அதை மறந்திருந்தீர்களானால் இதுதான் அதை மறுபடியும் ஞாபகத்தில் கொள்ள வேண்டிய தருணம். லிசியும் ஒருபோதும் அதை மறந்துவிடக் கூடாது. அவள் பெரிய வீட்டுப்பெண்; பனைவிளை புத்தம்வீட்டுக் குலவிளக்கு!...... லிசிக்கு வயது பதினான்கு ஆகிறது. பெரியபிள்ளை ஆகிவிட்டாள். ஆகையால், இற்செறிப்பு மிகவும் அவசியமாகிவிட்டது. நீங்கள் லிசியின் முகத்தைப் பார்த்தால் அந்தக் கண்கள் மட்டும் உங்களிடம், 'ஏன், ஏன்?' என்று கேட்பது போலிருக்கும். ஆனால் இதற்கெல்லாம் போய் துயரப்படாதேயுங்கள். துயரப்பட்டால், தமிழ்நாட்டின் மற்ற பெண்மணிகளின் துயரங்களுக்கெல்லாம் எப்படிக் கணக்கெடுக்கப் போகிறீர்கள்?". (பக்:36)

இது ஒரு சமூகப் பழக்க வழக்கம். நாடார்களுக்கென்றில்லை. வயது வந்த பெண் என்றால் இப்படித்தான். லிசியின் சித்தியும் கூட இப்படித்தான்; அவள் அடிச்சுக்கூட்டுக்குக் கூட சுயாதீனமாக வந்ததில்லை. ஆனால், லிசி இப்போதும் அடிச்சுக்கூட்டுக்கு வரமுடிகிறது. கண்ணம்மை செத்தற்குப்பின், கண்ணப்பச்சி, கண்பார்வை மங்கித் தனியாகி விட்டார். அடிச்சிக்கூட்டில் பெஞ்சில் உட்கார்ந்து அவருக்குப் பைபிள் படித்துக்காட்ட, தினப்பத்திரிகை வாசித்துக்காட்ட வேறு யார் உண்டு! லிசிக்கு அது புதிய பதவி.

ஞாயிற்றுக்கிழமை சாயங்காலம் பெரியவருக்கு லிசி பைபிள் வாசித்துக் கொண்டிருக்கிறாள். வாசலில் ஒரு நிழல் தெரிகிறது. உபதேசியாருடன் ஒரு ஆள், ஒரு வாலிபன். விருட்டென்று உள்ளே போகிறாள் லிசி. படியில் ஏறுகிற போது, அவன் யார் என்பதை மனம் சொல்லுகிறது. தங்கராஜ்! அவளுக்கே தெரியாமல் சிரிக்கிறாள். குடிகாரத் தகப்பனின் ஏச்சு; "எவங்கிட்ட பல்ல இளிச்சே சண்டாளி?"

இங்கே ஒரு குறிப்பணி காட்டப்படுகிறது.

இருட்டறைக்குள் கொடியில் கிடக்கும் துணிகளைப் பார்க்கிறாள். ஜன்னல் விளிம்பில் தடவி தீப்பட்டியை எடுக்கிறாள். துணிகளில் குச்சை உரசி வைத்தால் துணிகள் மட்டுமா எரியும்? ஆனால் குச்சி நெருப்புடன் தரையில் தவறுகிறது. அப்புறம் கயிறு கவனத்திற்கு வருகிறது. அதுபோதும்: இழுக்கிறாள்; அற்று விழுகிறது. துணிகள் குவிந்து தரையில் விழுகின்றன.

ஆசையை அறுத்துப் போட்டாளோ? ஆனால் சித்தியிடம் "ஒரு முழம் கயிறு எடுத்துக் கொடுப்பியா?" என்று கேட்கிறாளே! அது நிச்சயம் சுருக்கப் போட்டுக் கொள்ள அல்ல. பழையபடி கட்ட.

தங்கராஜ் சரியான நேரங்களில் வந்து தலைகாட்டுகிறான். அன்பையனுக்கு வயிற்றுப் பொருமல்; பனையேற முடியவில்லை. புத்தம் வீட்டுப் பனைகளில் அக்கானி இறக்கத் தங்கராஜ் வருகிறான். அக்கானியைச் சுமந்து வீட்டுக்குள் கொண்டுபோக விசி வருகிறாள். இருவரும் பேசிக்கொள்ள அது ஒரு வாய்ப்பு. முதலில் சிவப்புக் கீரை வித்துக் கொடுக்கிறான். அப்புறம் இரண்டு வாரம் கழித்துக் கேட்கிறான்-

"எனக்கு ஒங்கப்பன்கிட்ட எனக்கிண்ணு ஒரு காரியம் கேக்கணும் அதுக்கு மகளுக்கு சம்மதம் வேணும்!" அவளின் மௌனத்தைக் கண்டு பயந்துபோய்-

"என்ன, நான் பின்னும் தப்புதான் செய்திற்றெனோ? என்ன எளவோ! ஒரு வாக்கு சொன்னா போரும்"

"அப்பன் கொன்னே போடுவார். கொன்னே போடுவார்!"

இதுபோதும்: அவள் உள்ளத்தில் அன்பு உண்டு. புரிகிறது.

பனைவிளைக்கு இப்போது புதிய உபதேசியார். அவரைக் கண்டு பேசிப் பெண்கேட்கச் சொல்வது அவனுக்குச் சரியாகப் பட்டது. தகப்பனிடம் சொல்ல முடியாது. நேரடியாகச் சென்று கேட்பதோ மரபல்ல.

"சார் ஒங்களப் பாக்க வந்தேன்!"

இவர் படித்த உபசேியார்; கேள்விகள் சரியாகவே எழுப்பப் படுகின்றன.

"நீர் யார் சொல்லும்?"

"நான் தங்கராசு - ஒங்க சபைல இருந்துதான் - புத்தம் வீட்டுக்குக் கிளக்கு வீடு;"

"ஓ! உம் தொழில்?"

"பனையேத்து".

உரையாடல் இப்படிப் போகிறது. உபதேசியாருக்கு இரு குடும்பத்துக்குமுள்ள இடைவெளி புரிகிறது. தங்கராஜ் சொல்லுகிறான் -

"என்னவானாலும் ஒரே குலந்தானே!"

"குலம் எல்லாம் ஒன்றுதான். ஆனால் பழக்க வழக்கத்தாலே, இரண்டாகிக் கிடக்குது. தெரியுமா? குலம் வேறாக இருந்தால் கூட மனசு ஒத்து வந்தால் குலம் ஒன்றாகிவிடும். இங்கேயானால் மனசு ஒத்துவராது போலிருக்கே!"

'புத்தம் வீடு' நாவலில் இது மிக முக்கியமான உரையாடல்; கருவும் இதுவாகவே இருக்கலாம். நாடார்கள் நாடார்கள்தாம்; சாதியால் அது நாடார்குலம்; கண்ணப்பச்சியும், அன்பையனும் நாடார்கள்தாம் - பின் ஏன் பெண்கேட்கக்கூடாது! அங்கேதான் 'சிக்கல்'.

பிராமணன் வெள்ளாளப் பெண்ணைக் கேட்டால் சரி; வெள்ளாளன் நாடார் பெண்ணைக் கேட்டால் சரி; நாடான் செட்டியார் பெண்ணைக் கேட்டால் சரி; சிக்கல் என்று எடுத்துக் கொள்ளலாம். ஆனால் இங்கே நாடார் நாடார் பெண்ணைக் கேட்பதில் என்ன சிக்கல்?

நாடார்களில் பனையேறாத நாடார், பனையேறும் நாடார் என்று பழக்க வழக்கங்களால் இரண்டு பிரிவுகள். கண்ணப்பச்சி பண்ணையார் குடும்பம். நில உடைமை சமூகத்தின் பிரதிநிதி; மரம் ஏறுவதை விட்டுவிட்ட குடும்பம்; ஒரு காலத்தில் ஏறியிருக்கக்கூடும், ஆனால் நேற்று, இன்று இல்லை. நிலபுலன்கள் பெருகி, ஒருவேளை கண்ணப்பச்சி, பழைய வசதியோடு இல்லையென்றாலும், பண்ணையார் பாரம்பரியமல்லவா!

ஆனால், அன்பையன் வெறும் பனையேறி! இன்று ஒருவேளை அவனுக்குக் கண்ணப்பச்சியை விட நிலபுலன்கள் கூடுதலிருக்கலாம்; அதனால் என்ன? இன்று அவன் பனையேறுகிறான்; பனையேறி, இது சாதிக்குள் சாதி! அப்புறம், அன்பையனின் மகன் தங்கராஜ் கண்ணப்பச்சியின் பேத்தியைப் பெண் கேட்க முடியுமா?

அன்பையன் ஊகித்துக் கொண்டான்.

"நீ எந்தப் பெண்ணெக் கேட்டே?"

"எந்தப் பொண்ணு அங்கு இருக்கும்?"

"............................................"

"மிஷன் வீட்டுக்குப் போனியா?"

அன்பையன் தலைமேல் கையை வைத்துக் கொண்டான். அவனுக்கு வியர்த்துக் கொட்டியது. அன்று வீட்டில் யாரும் சாப்பிடவில்லை, தம்பி செல்லப்பனைத் தவிர. தங்கராஜை, அன்பையன் பாண்டிக்கு அனுப்பி வைத்து விட்டான். புத்தம் வீட்டுக்காரர்களின் பாரம்பரியப் பெருமையின் முன் ஒரு வாலிபனின் ஆசை எவ்வளவுதான் நிற்க முடியும்!

ஆனால், அன்பையனின் வீடு வருங்காலத்தில் புத்தன் வீடாக மாறாதோ! மாறக் கூடும்! ஆனால் இன்று நிலமை அப்படியில்லை என்பது உண்மைதான்! டேவிட் சித்தையா இப்படி எழுதுகிறார் -

"முன்னைய சமுதாயம் - பண்பாட்டை - பக்தியைக் கொண்டிருந்த சமுதாயம். இந்தச் சமுதாயமோ, உடமைகளைத் தக்கவைத்துக் கொள்ளத் தூண்டும் முதலாளித்துவச் சமுதாயம். இதனால் நிலப் பிரபுத்துவ சமுதாயத்தின் குறுகிய எல்லைகளுக்குள் வாழமுடியாததாலும் - கிராமபுறச் சமுதாயத்தின் கூட்டுச் சமுதாயங்கள் உடைந்து உருக்குலைந்ததாலும், பொருள்தேடி, கல்விதேடி, பெண்தேடி கிராமங்களைவிட்டு வெளியேறி நகரங்களை நாடிச் சென்றும் வாழ்கிறார்கள். இவைகள் எல்லாம் முதலாளித்துவச் சமுதாயம் வேரூன்றத் தொடங்கியதன் விளைவுகள்-" கிறிஸ்தவ நாவல்கள் - ஒரு சமுதாயப் பார்வை - பக்: 5.

நாவலில் காட்டப்படும் செய்தி இன்னும் ஆழமானதாகத் தெரிகிறது. புலிப்புனத்தில் வாழும் எப்சிபா ஜேசுதாசன் நிலஉடைமைச் சமுதாயம், முதலாளித்துவச் சமுதாயம் என்ற யாதொன்றையும் காரண காரியங்களாக அறியாத நிலையில், அவர் உள்ளக்கிடக்கை வேறு ஒரு முக்கியமான செய்தியை இதன் மூலம் வெளியிடுகிறது எனலாம். அது என்ன?

கிறித்தவம், கீழ்ச்சாதியினரான நாடார்களைத் தூக்கி நிறுத்திய நிலையில் - கிறித்தவர்கள் சாதி அலைகளிலிருந்து விடுதலை பெறவில்லை என்பதையே இந்த நிகழ்வு மூலம் வெளிப்படுத்துகிறார். இங்கே கிறித்தவத் தாக்கம், சாதிப் பிரிவுகளைத் தகர்ப்பதற்குப் பதில் சாதிக்குள் சாதியை உருவாக்கிவிட்ட அவலம் சுட்டப்படுகிறது. இதுதான் கொடுமை.

அப்படியானால், இவர்கள் இன்னும் கிறித்தவத்துக்குள் வரவில்லை. கிறித்தவத்தால் ஏற்பட்ட ஒரு காலக்கட்ட மாற்றத்தைப் பயன்படுத்திக் கொண்டு பழைய நிலையிலேயே இருந்து கொண்டிருக்கிறார்கள். இது மதம் சம்பந்தப்பட்டதானாலும் மேல்நிலை ஆக்கமே. இந்த மேல்நிலை யாக்கத்துக்குத் தாவிய கிறித்தவர்கள், மற்றையோரைக் கீழ்நிலை யாக்கத்துக்குத் தள்ளி, மீண்டும் ஒருவித சுரண்டலையும், மீண்டும் ஒரு அடிமைத்தனத்யையும் உருவாக்கிக் கொண்டுதான் இருக்கிறார்கள்.

வேறு வகையில் கூறுவதாயிருந்தால், மேல்நிலையாக்கம் பெற்ற கிறித்தவர்கள் புதிய பிராமணர்களாகத் தங்களை மாற்றிக் கொண்டு, கீழ்நிலைக் கிறித்தவர்களைப் பறையர்களாகவே கருதிக் கொண்டிருக் கிறார்கள். இவ்வளவுக்கும் இது ஒரே சாதிக்குள்ளேயே நடக்கிறது!

கிறித்தவ அமைப்பின் செயல்பாடும் இப்படித்தான் இருக்கிறது. ஆதீனத் தலைமையும், நிர்வாகக்குழுவும் ஆதிக்க வெறியுடன் கோலோச்சுகிற கொடுமை வெளிப்படையாகவே தெரிகிறது. பதவிகளைப் பங்கிட்டுக் கொள்ளும் அரசியல்; கீழ்மட்ட மக்களைப் பற்றிய பாராமுகம்! ஆக, கிறித்தவம், ஆரம்ப காலக்கட்டத்திலிருந்து மாறி ஆதிக்க சக்தியின் கைகளில் சிக்கிக் கொண்டிருக்கிறது! இதையெல்லாம் விளக்கவே இந்த

லிசி - தங்கராஜ் காதல் பிரச்சினை புத்தம் வீட்டின் கருவாகிறது. அதே நேரம் அன்பையனின் வளர்ச்சி - அவன் வீடு அனைத்தும் மாறி வருகிற ஒரு சமுதாயத்தைக் குறியீடாக உணர்த்தத்தான் செய்கின்றன.

டேவிட் சித்தையா இன்னொரு இடத்தில் எழுதுவதை இங்கு கவனிக்கலாம்: "இதில் வரும் கண்ணப்பச்சியின் குடும்பமும் பழையவீடும், பழைமைப் பெருமை பேசியபடியே சீரழிந்து போவது. அழிந்து கொண்டிருக்கும் நில உடைமைச் சமுதாயம் தனது கடைசிக் காலக்கட்டத்தில் பழைமை பெருமையினாலேயே நிலை நிற்க முயலும் வீண் முயற்சியின் சித்திரிப்புத்தான். அதன் அருகிலேயே பனையேறி அன்பையனின் 'புத்தம் வீடு' முளைத்துக் கிளர்ந்து எழுவதானது, மாறி வருகின்ற ஒரு புதுமைச் சமுதாயத்தின் புதிய உதயத்தினுடைய குறியீட்டு முறைச் சித்தரிப்புத்தான்" (மேற்படி, பக் ; 4).

லிசியைக் கைவிட்டுவிட ஆசிரியை தயாரில்லை. இந்த முயற்சியின் விளைவுதான் சித்தப்பா கொலை செய்யப்படுவது. இது அண்ணன் தம்பி விவகாரம். குடிகார அண்ணன் பொன்னுமுத்து இந்தக்கொடிய காரியத்தைச் செய்கிறான். இது. பூர்வீக நாடார் கலாச்சாரம் போல் தெரிகிறது. தலை துண்டிப்புக்கு நடப்பியல் உதாரணங்கள் இருக்கக் கூடும். தங்கராஜை சிறைக்குள் தள்ள இது அண்ணனின் உத்திபோல் தெரிகிறது. ஆனால், சித்தப்பாவும் சரி, அண்ணனும் சரி - இருவரும் செத்தால் தானே லிசி தங்கராஜை அடைய முடியும். கண்ணப்பச்சி! முதுமை அவரைத் தளரச் செய்துவிட்டது. அவரைச் சமாளித்துக் கொள்ளலாம்.

இந்த நேரத்தில் பாண்டியிலிருந்து தங்கராஜ் வந்தது நாடக உத்தி. அவன் கைது செய்யப்படுவதில் வியப்பில்லை. குடிகார அண்ணனும், லிசியின் தகப்பன் தான் - கைது செய்யப்படுகிறான். குடிகாரத் தகப்பனை வயித்தியன் ஜாமீனில் எடுக்கிறான்! யார் இந்த வயித்தியன்! வேறு யாருமில்லை; நாம் தேவையில்லை என்று விட்ட ஒரு கதை அது. அதை இங்கே விவரிக்கப் போவதில்லை. புத்தம் வீட்டை நீங்கள் புரட்டிப் பார்க்காமலேயே இருக்கலாம். ஆனால் அது அவசியம் என்பதால் உங்களுக்கு மூல பாடத்தைப் புரட்ட ஒரு வாய்புத் தரப்படுகிறது. அப்படி இல்லையென்றால் இந்தக் கட்டுரை அவசியமற்றதாகிவிடும்.. மூல பாடம் இல்லாமல் ஒன்றுமில்லை. எல்லாம் மூல பாடத்தைச் சுற்றியே நிற்கும். அதைப் புரட்டுவது பெரிய காரியமல்ல. நமது திறனாய்வு-சித்தப்பாவுக்கு ஒரு மகள் உண்டு. அவள் லிசிக்குத் தங்கை; பிராமணப் பெண்போல் அழகனாவள், லிசிக்குக் கலியாணமாவதற்கு முன் லில்லியை வைத்தியன் திருமணம் செய்து கொண்டான் என்று கதையை மட்டும் சொல்வதல்ல. நமது திறனாய்வு, சமூக வரலாற்றத்தில் ஒரு மாற்ற காலக்கட்டம் எவ்வாறு கதையில் பின்னப்பட்டிருக்கிறது என்பதை ஆராய்வதுதான்.

இனி லிசி கல்யாணம் நடக்க வேண்டுமானால் அப்பனும் சாக வேண்டும். அவனும் நுரை தள்ளிச் சாகிறான். இந்த இரண்டு சாவுகளும், லிசியின் கல்யாணத்துக்கு அவசியம். ஆனால் இந்த இரண்டு சாவுகளும் குறியீடுகளாக, நிலவுடைமைச் சமுதாயத்தின் வறட்டுப் பிடிவாதத்தின் வீழ்ச்சியாகக் கருதப்படலாம். அது அழிவதால் மட்டுமே இயற்கை, கீழ்ச்சாதிக்கு நீதி வழங்க முடியும். இங்கே, கொள்கை, கோட்பாடு என்ற நிலையில் சமுகப் போராட்டம் ஒன்றுமில்லை. எல்லாம் இயற்கையின் கையில் தீர்ப்புக்கு விடப்படுகின்றன. இதனால் அடுத்தக் கட்டப் புனரமைப்பைச் சாவின் மூலம் இயற்கை நடத்திக் காட்டுகிறது. இது எப்சிபா ஜேசுதாசனின் காலக்கட்ட சிந்தனை. இதை நாம் எப்சிபா சிந்தனை என்றே கூறலாம். இங்கே ஏசுகிறித்துவின் சமூக மறுமலர்ச்சிக்கும் போராட்டத் திற்கும் இடமேயில்லை. அடக்கி வாசிக்கக் கற்றுக் கொண்டுவிட்ட கிறித்தவ வாழ்க்கை விண்ணரசு என்பதெல்லாம் இன்னொரு உலகம் சம்பந்தப்பட்டது. இங்கில்லை. ஒருவேளை, ஏசுகிறித்துவின் போராட்டமும் சிலுவைத் தண்டனையும், இனித் தேவையில்லை. அனைத்தும் இயற்கையின் தீர்ப்புக்கு விடப்பட்டு, சாவு ஒன்றே புனரமைப்பைச் செய்து கொள்ளட்டும். மூப்பனார் தகுதியற்றவர் என்றும், உபதேசியார் பாமர மனிதர் என்றும், சொல்வதற்குக் கூடத் தேவையில்லை. ஆதீன ஆதிக்க சக்தி தவறு செய்யட்டும்; அது மாட்டுத் தொழுவில் பிறந்த ஏசுநாதரின் வரலாற்றை மாற்றி எழுதட்டும். பரவாயில்லை. காலம் அனைத்தையும் சரி செய்யும்.

பிற்பாடு தங்கராஜ் ஒரு பாரம்பரிய கட்டுமானத்தை எதிர்த்து நிற்கிறவனாகவே காட்டப்படுகிறான். ஆனால் கட்டுமானம் சீரழிந்து வீழ்ச்சியடைந்து விட்டது. எஞ்சிய பொருள் கண்ணப்பச்சி மட்டுமே. கடைசி மனிதர். அவரும் கண்கள் பஞ்சடைந்து, தள்ளாடி விட்டார். இந்த நிலையில் இந்தக் கட்டுமானத்தை எளிதில் இடித்துத் தள்ளிவிட முடியும். கண்ணப்பச்சி சரணடைந்தே ஆக வேண்டும். பீரங்கிகளுக்குமுன் கட்ட பொம்முக்களின் மண் கோட்டைகள் நிற்க முடியாது.

ஒரு வறட்டுப் பாரம்பரியம் வீழ்ச்சியடைகிற போது மட்டுமே தங்கராஜ் லிசியின் கையைப் பிடித்துத் திருமணம் செய்து கொள்ள முடிகிறது. அது கம்பீரமாக நிற்குமானால் தங்கராஜ் ஊரைவிட்டு ஓடிவிடவோ, அல்லது தலை சீவப்பட்டுக் கொல்லப்படவோ வேண்டும்..

இதன் பின்னணி 'உபதேசி' பின்னணி, உபதேசியார்கள் கற்றுத்தந்த பாடம் இது. ஏசுகிறித்து சிலுவையில் அறையப்பட்டார் என்பது உபதேசிகளின் பார்வையில், ஒருவித அச்சுறுத்தல்; எச்சரிக்கை. அதனால் புரட்சிக்கு வழிவகுத்தல் என்பதோ, நீதியைக் கேட்டல் என்பதோ, சிலுவையில் முடியும். இதனால் எல்லாவற்றையும் ஏசுகிறித்துவின் சிலுவையோடு நிறுத்திக் கொள்ள வேண்டும்.

சீரழிந்து விட்ட ஒரு பாரம்பரியத்தின் கதவைத் தங்கராஜ் தட்டுகிறான். அதுவும் முன் கதவையல்ல; பின் கதவை. லிசி வருகிறாள்.

"எங்கூட இறங்கிவா. இப்ப இறங்கிவா!"

"ஐயோ!"

இந்த 'ஐயோ'; அடக்கப்பட்டு, அடைக்கப்பட்டுப் போன ஒரு சமூகத்தின் குரல். அது வீட்டை விட்டு என்றுமே இறங்கி வந்ததில்லை. ஒரு சமூகத்தின் நிரந்தரப் பழக்க வழக்கத்தை அவ்வளவு எளிதில் உடைத்தெறிந்துவிட முடியுமா? பெண் விடுதலை என்பது வீட்டை விட்டு ஓடுவது மட்டும் தானா? அல்லது சமூகத்தை விட்டு ஓடித் தப்பித்துக் கொள்வதா? இல்லையே?

லிசிக்கு இப்போது துணிவு வந்துவிட்டது. தாயார் வந்துவிட்டது தெரிகிறது. லிசி சொல்லுகிறாள்: "நிண்ணு பார்க்கட்டும்."

தாயார் 'லிசி குட்டீ, குட்டீ!" என்று கூப்பாடு போடுகிறாள். லிசி அசையவில்லை. இது ஒரு புரட்சி போலவே தெரிகிறது. அதோடு லிசி, தாயாரை அணுகி, "அம்மா! எங்களை ஆசீர்வதி" என்கிறபோது கதை முடியத்தான் வேண்டும்.

ஆனால் அப்படியில்லை. திருமணம் ஒரு பாரம்பரிய சடங்கல்லவா! அதுவும் சிறுதெய்வ வணக்கம் என்பது, முற்றிலும் சடங்குகளின் தொகுப்பல்லவா. இவர்கள் எல்லோரும் பரம்பிதாவைத் தொழுது கொண்டிருக்கிறார்கள் என்றா நம்புகிறீர்கள்? அப்படியானால் சடங்குகளும், விழாக்களும் எதற்கு!. முன்னால் ஒரு இடத்தில் சொன்னதாக நினைவு; 'பழங்குடிமனம்' இவர்களைவிட்டு இன்னும் விலகவில்லையே! ஒருவேளை ஏசுகிறித்துவைக் கூட இவர்கள் சிறுதெய்வமாகவே வழிபடுகிறார்களோ என்னவோ!

கண்ணப்பச்சி எழுகிறார். தளர்ந்துவிட்ட முதுமை நிலையிலும், கைத்தடியை ஊன்றியவாறு- "வைத்தியனைக் காணனும்" என்று கிளம்புகிறார். பின்னர் வைத்தியனுக்கும், கண்ணப்பச்சிக்கும் ஒரு உரையாடல்; இது பழைமைக்கும் புதுமைக்குமிடையே நடக்கும் உரை யாடலாகவே தெரிகிறது.

கதையின் முற்பகுதியில் வருகிற வைத்தியனல்ல இவன். கதையை சுமூகமாக முடிப்பதற்குப் புதிய பிறப்பெடுத்து நிற்கும் வைத்தியன். பிரச்சினையெல்லாம், பனையேறிக்குப் பெண் கொடுக்கலாமா என்பதுதானே. அதற்கு வயித்தியன் ஒரு சமரச உபாயம் கூறுகிறான்.

"அந்தப் பையன் அப்படி நம்ம பிள்ளையை விரும்பினால், அவளுக்காக, அவள் குடும்பத்துக்காக, அதை (பனையேறுவதை) விட்டுவிடச் சொல்லுங்களேன். கேட்க மாட்டானா? புளி வியாபாரத்தில்

நல்ல லாபமுண்டு. அவனுக்கு அதில் பழக்கமுண்டு. அதைச் செய்யச் சொல்லலாமே!"

சமரசம், தொழிலை விட்டுவிடச் சொல்வதுதான்; ஒருவேளை நாவிதத் தொழிலை விட்டுவிட்டால், வெள்ளாளன் கூடப் பெண் கொடுப் பானோ? ஆனாலும், இந்தச் சமரசம் கதையை முடிக்கும் உத்தியே.

கண்ணப்பச்சி இறங்கி வருகிறார். "எனக்கு ஒண்ணும் மனசிலாவல; நான் கிளவன்; போவப் போறவன். இந்தப் பூம்பிஞ்சுகளுக்க சந்தோசத் தையும் தொலைச்சிக்கிட்டா போய்ச் சேரணும்!"

ஆக, ஒரு பழைய மரபு வழிப்பட்ட, பிடிவாதமான சமூக அமைப்பு, மாறி புதிய மாற்றத்துக்கு வழிவிடுகிறது. ஒருவேளை இத்தகைய மாற்றங்களுக்குச் சமரசங்களும் தேவைப்படலாம் போலத் தெரிகிறது.

விசி - தங்கராஜ் இணைவது, கருத்தோட்ட மாற்றமில்லை என்றாலும் ஏதோ ஒரு வகையில் புதுமையாக்கமே! இந்தப் புதுமையாக்கம் ஒவ்வொரு காலக்கட்டத்திலும் - வரலாற்றுப் பூர்வமாக நிகழக் கூடியதே!

கதாசிரியை சமூக மாற்றக் கருவை உள்வாங்கிக் கொண்டுதான் புத்தம் வீட்டைப் படைத்தாரா என்பது வேறு; ஆனால் நிச்சயம் கதைக்கரு அதை நமக்கு உணர்த்துகிறது எனலாம்.

மற்றொன்றை கவனிக்க வேண்டியுள்ளது; 'எப்சிபா சிந்தனை' என்று நாம் முன்னர் கூறினோம். அது ஆசிரியையை மட்டம் தட்டுவதற்கல்ல. அந்தச்சூழலில் ஆசிரியையால் அவ்வளவுதான் செய்யமுடிந்தது. ஆனால் அதுவே பெரிது. ஒரு யதார்த்த நாவல் ஒரு சமுதாயத்தை அப்படியே படம்பிடித்துக் காட்டுவதுதான். அதற்குமேல் தீர்வு சொல்ல ஒன்றுமில்லை. படம் பிடித்துக் காட்டுவதால், சிந்தனாவாதிகள் கவனிக்கிறார்கள் என்பது போதுமானது. இதோடு ஆசிரியரின் பணி முற்றுப் பெற்றுவிட்டது; சமுதாயத்தை எப்படி மாற்றியமைப்பது என்ற தரிசனம் ஆசிரியைக்குத் தேவையில்லை. சிந்தனா வாதிகளில் அந்தத் தரிசனம் கிடைக்கிறவர்கள் அடுத்தது இன்னதென்று கூறலாம். சமூகமாற்றம் சிலருடைய சாவில் தீர்மானிக்கப்படுவதல்ல என்பதே நமது கருத்து. அது சிந்தனைகளாலும், கோட்பாடுகளாலும் தீர்மானிக்கப்படுவது. ஆனால் யதார்த்த நாவலொன்றை இப்படித்தான் எழுதமுடியும்! புத்தம் வீடும் அப்படித்தான் எழுதப்பட்டிருக்கிறது. ஒரு சமூகப்பிரச்சினை பதிவு செய்யப்பட்டிருக்கிறது என்பதே நமது கவனத்தில் நிற்க வேண்டும்.

இனி, நாம் எழுபதுக்கும் எண்பதுக்கும் வருகிறோம். அது முக்கிய காலக்கட்டமாகும். இதில் முற்போக்குச் சிந்தனை தலையெடுக்கிறது. யதார்த்தவாதம் சமஉடைமை யதார்த்தவாதத்துக்குத் திரும்புகிறது.

திருச்சபை, 'புத்தன் வீட்டில்' உயிரற்றதாய்க் காட்டப்பட்டது. விவிலிய மொழியில் கூற வேண்டுமானால், அது 'அனலுமற்ற குளிருமற்ற' திருச்சபை. சாதீயத்தில் ஊறிப் போன திருச்சபை; பழங்குடி மனமும், பழமையும், கூடவே, நில உடைமையின் நிழல்களும் கூடிய திருச்சபை.

1975 இல் வெளிவந்த ஐசக் அருமைராஜனின் 'கீறல்கள்' நாவல் இந்தத் தளத்தில் எழும்பிய - ஆனால் பிரச்சினைகளை வேறு முறைகளில் அணுகுகிற முக்கியமான நாவல்.

**கீறல்கள்**

கிறித்தவத் திருச்சபையின் முரண்பாடுகளை முன் வைத்து எழுதப் பட்ட நாவல்தான் கீறல்கள். கீறல்கள் முழுமையாக 'முரண்' உத்திகளைக் கொண்டது.

**கீறல்களில் வரலாற்றுப் பின்னணி**

வடசேரி, ஒழுகினசேரி, கோட்டாறு போன்ற பூர்வீகக் குடியிருப்புகள் போகச் சுற்றுப்புறக் கிராமங்களில் புதிய குடியிருப்புகள் தோன்றி நாடார்கள் ஒருவித வாழ்க்கையை அமைத்துக் கொண்ட பின்னர், கிறித்தவம் நாடார்களில் பெரும் பிரிவுகளை மதமாற்றம் செய்கிறது.

மணிமேடைக்கு மேற்கே நொச்சிக்காடு திருத்தப்பட்டு வெள்ளைக்கார மிஷனரி 'பங்களா' உருவாகிறது. அப்போது குடியேற்றமில்லை. மீட் ஐயர் என்பவர் நிலத்தைத் திருத்திப் பங்கிட்டு, கிறித்தவர்களாக மாறியவர்களுக்கு இலவசமாக வீட்டுமனைகள் வழங்கத் தீர்மானிக்கிறார்.

ரிங்கல்டோப் மிஷனரிக்கும் மீட் ஐயருக்கும் அடிப்படையிலான ஒரு வித்தியாசமுண்டு. ரிங்கல்டோப் முற்றிலும் மக்களுள் ஒருவராகத் தம்மை அடையாளங் காட்டிக்கொண்டார். மீட் ஐயர், மக்களிடமிருந்து பிரிந்து நின்றே பணி செய்தார்.

முதலில் மீட் ஐயர் மயிலாடியில்தான் தங்கினார். பின்னர் மிஷனரிப் பணிக்கு மயிலாடி உகந்ததல்ல என்ற முடிவில், நாகர்கோயிலைத் தேர்ந்தெடுத்தார். நாகர்கோயிலில் அவர் திருத்தியமைத்த வீட்டுமனைகள், பக்கத்து ஊர்களிலுள்ள நாடார்களை வலை போட்டு இழுத்தது.

ரிங்கல்டோப், நாடார்களின் மதமாற்றத்திற்கு முழுமையான ஆதரவு தரவில்லை. நாடார்களின் உள்மனக்கிடக்கையும், அவர்களின் பொருள் முதல் எண்ணங்களையும் அவர் அறிந்து நாடார்களின் மதமாற்றத்தைத் தட்டிக்கழித்தார் எனலாம். ஆனால் மீட், மதமாறிய அனைவரையும் இருகரம் விரித்து வரவேற்றார்.

நாகர்கோயில் குடியிருப்பில் நாடார்களும், அவர்களைவிடத் தாழ்ந்த சாதியினரும் பக்கத்துக் கிராமங்களிலிருந்து குடி பெயர்ந்து வரத் தொடங்கினர். இந்தக் குடியிருப்பு மங்களாவடி'க் (பங்களாஅடி) குடியிருப்பாயிற்று.

அப்புறம், புளியந்தோப்பு, பனைவிளைப் பகுதிகள் திருத்தப்பட்டுக் குடியிருப்புகளாயின. புதிய வீடுகள் தோன்றின. மணிமேடையிலிருந்து பிரிந்து மேற்காய் வரும் பாதையை நோக்கிப் பனைவிளையில் 'கல்கோயில்' எழும்பியது. இது 1819 ஆம் ஆண்டு.

இந்தக் குடியிருப்புகளில் நாடார்கள் பெரும்பான்மை பெற்றனர். தாழ்ந்த சாதிகள் சிறுபான்மையினரே. ஆனாலும் ஒற்றுமையாக வாழ்ந்தனர். மீட் ஐயரின் கலப்புத் திருமணத்திட்டம் சிறிதளவு வெற்றிப் பெற்றுப் பின்னர் செயலிழந்தது. கிறித்தவக் குடியிருப்புகள் விரிந்து மேற்காகப் புன்னைக்காடு வரை பரந்தன.

மீட் ஐயரின் பணியில் கவனத்தில் நிற்க வேண்டியது, அவரின் கல்விப்பணி; நசுக்கப்பட்ட, ஒடுக்கப்பட்ட இந்த மக்களுக்குக் கல்வியே விடுதலை தரும் என்பதை அவர் உறுதியாக நம்பினார். எனவே, பள்ளிக்கூடங்கள் எழுந்தன.

ஆக, மிஷனரிகளில் மகத்தான பணியில் உருவாகி, நிமிர்ந்து நின்ற கோயில்கள், திருச்சபை அமைப்பாக மாறி வளர்ந்தன. அது சுதந்திரத்துக்குப் பின் பல திருச்சபை அமைப்புகளை ஒருங்கிணைத்து தென்னிந்திய திருச்சபையாக வலிமையுடன் உருவெடுத்தது. திருச்சபை வளர்ச்சி ஆல்போல் விரிந்துவிட்ட நிலையில், மிஷனரி மனம் (MISSIONARY MIND) உள்நாட்டுக்காரர்களிடமிருந்து விடைபெற்றுக் கொண்டது. திருச்சபை மக்களமைப்பாக மாறிப் பொதுச்சபை, நிர்வாக சபை, ஆட்சிக்குழுக்கள் - தேர்தல்கள் மூலம் உருவாயின. புதியதோர் அரசியல் உருவெடுத்தது.

திருச்சபை ஒரு ஆதிக்கச் சக்தியாக மாறத் தொடங்கியது. திருச்சபை அரசியல், திருச்சபையைப் பணக்காரர்களுக்குத் தாரை வார்த்துக் கொடுத்தது. பதவிச் சண்டைகளும், பங்கு வைப்புகளும் திருச்சபையைக் குழப்ப, தலைமை என்பது ஆன்மீகமல்ல என்று புது இலக்கணம் வகுக்கப்பட்டது.

கிறித்தவர்களுக்குள் பணக்காரப் பிரிவினர் மேல் சாதியாக மாறினர். நடுத்தரவர்க்கத்தினர், மேல் சாதிப் பணக்காரர்களோடு ஒட்டிக் கொண்டனர். நடுத்தர நிலைக்குக் கீழிருந்தவர்கள் கீழ்ச்சாதியாக மாறினர். ஆகச் சாதிக்குள், சாதிகள் உருவாகின. ஆன்மீகம் ஓலைப் புரைகளைத் தஞ்சமடைந்தது.

மேல்சாதிப் பணக்கார வர்க்கம் ஆன்மீக வேஷம் போடத் தொடங்கியது. நிர்வாகக் குழுக்களைக் கைப்பற்றிக் கொண்டது.

நில உடைமைச் சமுதாயம் தோன்றியது. அதன் பிரதிநிதிகளாக மேட்டுக்குடியார்கள் நின்றார்கள். கிறித்தவ மதம் பணம் சம்பாதிக்கிற கேந்திரமாக மாறத் தொடங்கியது. நாயர்கள் போன்ற மேல் சாதியினரால் நசுக்கப்பட்டு. மிஷனரிகளால் விடுதலை பெற்ற நாடார்கள் பணக்கார வர்க்கமாகி-கீழ்நிலையில் கிடந்த நாடார்களையே நசுக்கத் தொடங்கினர்.

பள்ளிகளும் கல்லூரிகளும். மேல்மட்டப் பணக்காரர்களுக்கும், அவர்களை ஒட்டி நின்ற நடுத்தர வர்க்கத்தினருக்கும் வேலை வாய்ப்புகளைத் தந்தன. கீழ்மட்ட மக்களைத் தூக்கி நிறுத்த புதிய மிஷனரிகள் தோன்றவில்லை. விடுதலை, ஒரு பக்கத்தில் ஒதுங்கியது. திருச்சபை அமைப்பு, கீழ்மட்ட மக்களின் உயர்வுக்கு எதையும் செய்யமுடியாமல் - அரசியலில் காலங்கழிக்கத் தொடங்கியது: இது ஒரு காலக்கட்டமாகும். இந்தச் சூழ்நிலையின் பின்னணியில்தான் 'கீறல்கள்' நாவல் உருவாகியது. இந்தச் சூழ்நிலை யதார்த்த நாவலையன்றி வேறு ஒரு வகையை நிச்சயம் பிரசவிக்க முடியாது. புன்னைக் காட்டைக் களமாகக் கொண்டு எழுந்த இந்த நாவல், பற்றி ஆசிரியர் கூறுவது:

"கீறல்கள் கற்பனையோ அல்லது நான் கண்மூடியவாறு கண்ட கனவோ அல்ல............... பார்த்த சமுதாயத்தின் - ஒரு வீட்டின் கதை அது. இந்தக் கோணல் சமுதாயத்திலே. இப்படி ஒரு காட்சியை-நிகழ்ச்சியை-அடுக்கடுக்கான துயரங்களை-சங்கடங்களைக் கண்டு. அவற்றை என் மன அறைக்குள் பூட்டி வைக்க முடியாமல் பொட்டித் தெறிக்க விட்டதன் விளைவுதான் கீறல்கள்"

டேவிட் சித்தையா இப்படி எழுதுகிறார்: "கீறல்கள் இந்த வகையில் ஒரு வித்தியாசமான நாவல்: 'ஆத்மாவுக்குச் சோறிடும் கிறித்தவர்களே, நீங்கள் சமுதாயத்துக்குள்ளும் இறங்கி வாருங்கள்' என்று வேதமணி வாத்தியாரின் வாயிலாக இது அறை கூவல் விடுகிறது. நாட்டின் வறுமைக்கும் மேட்டுக்குடியாரின் பொருளாசைக்கும் எதிராக மதமும் போராட்டத்தில் குதிக்க வேண்டும் என்று ஒரு புதிய கிறித்தவக் கோட்பாட்டை இந்நாவல் முதல் முதலில் வலியுறுத்துகிறது. இது கிறித்தவ நாவல் இலக்கியத்தில் இதுவரை காணப்படாத புதுமையான போக்கு". கிறித்தவ நாவல்கள் - ஒரு சமுதாயப் பார்வை, பக்:8.

இந்த நாவல் எழுந்த சூழ்நிலை இங்குக் கூறப்பட்டது. இந்தச் சூழ்நிலையை எதிர்த்து நிற்கக் கூடிய தீர்க்கதரிசன நூலாகக் கீறல்கள் உருவானது என்று கூறலாம்.

கிறித்தவ நாடார்களைப் பற்றி எழுந்த இரண்டாவது நாவல் இது. நடுத்தர நிலைக்குக் கீழே. அன்றாடம் காய்ச்சிகளான ஒரு குடும்பத்தின் கதைதான் கீறல்கள்.

## அம்மாவும் அப்பாவும்

மேரி அம்மாவும், முத்தையா அப்பாவும் குடும்பத்தைக் கட்டி எழுப்ப எவ்வளவோ பாடுபடுகின்றார்கள்; ஆனால் இயலவில்லை. கிடைக்கிற வருமானம் குடும்பத்தை நடத்துவதற்கே போதவில்லை. அப்பாவுக்கு அண்டி ஆபீசில் வேலை. அண்டி ஆபிஸ் மேட்டுக் குடியாருக்குச் சொந்தம். உளுந்தங்கஞ்சியும், சாளை மீனுமே அவர்களுக்கு வாய்த்த உணவு. தோட்டத்தில் மாமரங்கள், கொய்யா மரங்கள்-அனைத்தும் அம்மா வைத்து உண்டாக்கியவை.

குடும்பத்தில் செல்லப்பா, துரை, பாக்கியம், தம்பி, பேபி என்று ஐந்து பிள்ளைகள். பையன்களை டாக்டராகவோ, இஞ்சினியராகவோ பார்க்க வேண்டும் என்று அப்பாவுக்கு ஆசை. ஆனால் இது வெறும் கனவு மட்டுமே. குடும்பமே ஒரு போராட்டக் களமாக இருக்கிறது. பிள்ளைகளின் போக்கு சரியில்லை. செல்லப்பா அடிதடி வழக்குகளில் சிக்கி நக்சலைட்டாக மாறிவிடுகிறான். தம்பி நாடகக் கம்பெனியோடு ஓடிவிடுகிறான்.

துரை கோழிப் பண்ணை பயிற்சி முடித்து விட்டு ஊருக்கு வந்து கோழிப்பண்ணை தொடங்குகிறான். அவனால் அப்பாவுக்கோ அம்மாவுக்கோ பயனில்லை.

அவனுக்குக் கலியாணம் நடத்தி வைக்கிறார் அப்பா; போகப் போக லில்லிக்கும் அம்மாவுக்கும் ஒத்துப் போகவில்லை. இது விலை கொடுத்து வாங்கிய நரகம்.

அப்பா யோசிக்கிறார்; பாக்கியத்துக்கும் பேபிக்கும் உடனடியாகக் கலியாணத்தை முடித்து வைத்துவிட வேண்டும். வீட்டு நிலத்தில் ஒரு பகுதி விற்கப்படுகிறது-துரையின் எதிர்ப்போடு. இரண்டு கலியாணங்களும் அடுத்தடுத்து நடக்கின்றன: பாக்கியமும், பேபியும் போய்விட்டார்கள்.

துரையினாலும், அவன் மனைவி லில்லியாலும் வீடு இரண்டாகப் படுகிறது. இழுப்பு நோயாளியான அம்மா கடைசியில் மருந்து கூட இல்லாமல் சாகிறாள்.

இந்தக் கதைச் சுருக்கம், கதையின் அவலத்தைச் சொல்லப் போதுமானதல்ல. ஒரு வசதிக்காக மட்டுமே சொல்லப்பட்டது. மூலபாடம் (ORIGINAL TEXT) மட்டுமே கதையின் அவலங்களை முழுமையாகச் சொல்லக்கூடியது.

## அப்பா - மேட்டுக்குடியார்

அப்பா கீழ்த்தட்டுக்காரர். ஒரு வீடு, மனை தவிர வேறு இல்லை. மேட்டுக்குடியார் மேல் தட்டுக்காரர்; ஊரையே விலைக்கு வாங்குகிறவர்.

முரணான இந்தப் பாத்திரங்களே-செல்லப்பாவை தீவிரவாதியாக மாற்றியது. இந்தவிதமான சமுதாய முரண்பாடுகள், ஒருவனை நிச்சயம் தீவிரவாதியாகவே மாற்றும்.

**செல்லப்பா - துரை**

முரண்பாடுகளை மாற்றத் தீவிரவாதத்தைத் தேர்ந்தெடுக்கும் செல்லப்பா, கடைசியில் போலீசால் சுட்டுக் கொல்லப்படுகிறான்.

துரை முரண்பாடுகளை அங்கீகரித்து, தன்னை மேட்டுக்குடியாரைப் போல உயர்த்த நினைக்கிறான். இதனால், அப்பா, அம்மா இவர்கள் மனிதர்கள் என்பதைக் கூட அவன் மறந்துவிடுகிறான்.

**பாக்கியம் - பேபி**

ஒரு சமுதாயத்தில் பெண்களுக்கென்று வகுக்கப்பட்டுள்ள, அடக்கமும், ஒடுக்கமும் அன்றி வேறு யாதொரு சிந்தனையுமற்ற படைப்புகள். பெற்றோரின் முடிவுப்படித் திருமணம் முடிய, களத்திலிருந்து விலகிக் கொள்ளுகிறார்கள்.

**திருச்சபை - கீழ்த்தட்டுமக்கள்**

இரண்டுக்குமுள்ள இடைவெளி நிரம்பாமலே கிடக்கிறது. திருச்சபை பணக்காரர்களின் கைக்கு மாறிவிட்டது. மேல்தட்டு மக்களே திருச்சபையின் சலுகைகளுக்குரியவர்கள்.

தேர்தலில், கீழ்த்தட்டு மக்கள் வெற்றி பெற முடியாது. அதற்கான பணபலம் அவர்களுக்கில்லை. போதகர்கள் பணக்காரர்களின் பக்கம் சாய்ந்து விட்டார்கள். இது ஒருவித சமரசம்; வாழ்க்கைப் பிரச்சினை. 'மிஷனரி மனம்' அவர்களை விட்டு அகன்றுவிட்டது. திருச்சபை ஒருவித ஆதிக்க சக்தியாகிவிடப் போதகர்கள் பதவிகளைக் காப்பாற்றிக் கொள்ள அந்த ஆதிக்கச் சட்டசபையில் உறுப்பினார்களாகி விட்டனர். அங்கி ஒரு கபட நாடகம்; பிழைப்புக்குரிய வழி. பிரசங்கம் - அதுவும் ஞாயிற்றுக்கிழமை மட்டுமே - ஒரு தொழிலாகிவிட்டது. போதகர்கள் சம்பளம் வாங்கும் தொழிலாளிகள் மட்டுமே. அவர்கள் ஆதிக்கச் சக்திகளுக்கு அடங்கியே நடக்க வேண்டும்.

திருச்சபை நில பிரபுத்துவ சமூகத்தை உருவாக்கும் ஒரு அமைப்புதான். இங்கு, சொர்க்கம்-நரகம் என்ற விளக்கங்கள்-கீழ்த்தட்டு மக்களை ஏமாற்றும் தத்துவங்கள்.

நிலப்பிரபுத்துவச் சமுதாயத்தோடு முதலாளித்துவச் சமூகத்தையும் இரட்டைகளாகத் தோற்றுவிப்பதில் திருச்சபை பின்வாங்கவில்லை. இந்த நிலபிரபுத்துவச் சமுதாயமும், முதலாளித்துவச் சமுதாயமும், சாதீயத்தை

நிலைநாட்டுபவை. எனவே, திருச்சபைக்கும் இந்தச் சாதீயத்தில் பங்குண்டு. திருச்சபை உருவாக்கிய சாதீய அடுக்கு-குமரி மாவட்டத்தைப் பொறுத்தவரைக் கீழ்க்காணுமாறு அமைகிறது.




திருச்சபையைப் பொறுத்த வரைக்கும் கீழ்த்தட்டு நாடார்கள் ஒருவகையில் தலித்துகளே. இவர்களோடு பிராமணர்களாகக் கருதப்படும் நாடார்கள் உறவு பெரும்பாலும் இல்லை. இவர்களின் திருமணத்துக்கு மேல்த் தட்டு நாடார்கள் போவதில்லை. திருச்சபையில் இவர்கள் கவனிக்கப்படாத பஞ்சமர்களே! இவர்களுக்கென்று எந்தத் திட்டங்களும் திருச்சபையில் இல்லை.

இந்தக் கீழ்த்தட்டு நாடார்கள் ஏற்கனவே குறித்தபடிக் கொஞ்சமாகத் திருச்சபையிலிருந்து விலகி ஓலைப்புரைகளுக்குள் ஆன்மீகத்தைத் தேடி ஓடுகிறவர்கள். பொறுமையோடு கடவுளின் வருகைக்காகக் காத்திருக்கிற இந்தக் கீழ்த்தட்டு மக்கள் - அச்சத்தினால் ஆலயங்களுக்கு ஒழுங்காகப் போகிறவர்கள். இவர்களைத் திருப்திப்படுத்தவே பலவேளைகளிலும், 'ஏசுவே வாரும்' என்ற அறிவிப்பு முழங்கும். இந்த எதிர்பார்ப்பில் ஏமாந்து கொண்டிருப்பவர்களே கீழ்த்தட்டு மக்கள். இவர்களில் சிலர்தான் புரட்சிக்குரல் எழுப்புகிறவர்கள். ஆனால் முதலாளித்துவ கிறித்தவ அமைப்பு இவர்களைக் கண்டு கொள்வதில்லை.

### சாமுவேல் நாட்டையர் - வேதமணி வாத்தியார்

கோயில் பூசாரியான சாமுவேல் நாட்டையர் ஒரு காலை ஆதிக்க சக்திகளின் கட்டத்திலும், ஒரு காலை, கீழ்த்தட்டு ஒடுக்கப்படுகிறவர்களின் கட்டத்திலும் வைத்துக் கொண்டு நடக்கிறவர். ஆனால், மனிதாபிமானி, புரட்சி மேல் நம்பிக்கையில்லை. ஆனால் அப்பாவின் அண்டி ஆபிஸ் வேலை பறிபோனதும், அப்பாவுக்காகப் போராட்டத்தில் குதித்தவர்.

காதறுத்தான் மடத்தில் குளிருக்கு நடுங்கிய கிழவிக்குத் தன் அங்கியைக் கழட்டிப் போர்த்திவிட்டு நடந்தவர். ஒரே மனிதன் ஆதிக்க சக்தியின் உறவையும், ஒடுக்கப்பட்ட மக்களின் உறவையும் கொண்டிருக்க முடியுமா! முடியும்! எல்லோராலும் முடியாது. சபைப் போதகரால் முடியும். இதனால், சாமுவேல் நாட்டையரை இரட்டை வேடம் போடுகிறவராகக் கூற முடியாது. திருச்சபையின் அமைப்புதான் இதற்குக் காரணம்.

ஆனாலும், வறுமையை ஒழிக்கத் திருச்சபையால் முடியும் என்பதே இவரின் நம்பிக்கை.

நடுத்தரப் பள்ளிக்கூட வாத்தியாரான வேதமணி வாத்தியார் திருச்சபையில் கீழ்த்தட்டு நாடார். கிறித்தவ கம்யூனிஸ்ட்; ஒழுங்கு முறையான வாழ்க்கையாதலால் (SYSTAMATIC LIFE) வறுமையில்லை. திருச்சபையால் வறுமையை ஒழிக்க முடியாவிட்டால், அது ஒதுங்கி, கம்யூனிசத்துக்கு வழிவிட வேண்டும் என்பது இவர் வாதம். இவர் கிறித்தவர் என்பதால் மட்டுமே கிறித்தவக் கம்யூனிசம் என்கிறார்.

அப்பாவின் நண்பரான வேதமணி வாத்தியார், சாமுவேல் நாட்டையருக்கும் நல்ல நண்பரே! சாமுவேல் நாட்டையருக்குக் கம்யூனிசம் என்ற சொல் ஒவ்வாமையை (ALERGY) ஏற்படுத்துவது. கிறித்தவன் கம்யூனிஸ்டாக இருக்க முடியாது என்று வாதிடுகிற நாட்டையருக்கு. 'ஏசு கிறித்துவே ஒரு கம்யூனிஸ்ட்' என்று பதில் கூறும் அளவுக்கு வேதமணி வாத்தியார் துணிந்தவர்.

ஆனால், வேதமணி வாத்தியார் கம்யூனிஸ்ட் கட்சிக்காரர் அல்ல. கம்யூனிசத் தத்துவமே இவரைக் கவர்ந்தது. காரணம் ஏசுகிறித்துவின் போதனைகளுக்கும் கம்யூனிசத் தத்துவங்களுக்கும் வேறுபாடில்லை என்பது இவர் கட்சி. ஒருவேளை கம்யூனிஸ்ட் இயக்கம் என்று சொல்லலாமா! சொல்லலாம். மனிதாபிமான சிந்தனையுடைய ஒரு இயக்கமாயிருப்பதில் தவறில்லை. அத்தகைய ஒரு இயக்கத்தோடு கிறித்தவம் சமரசம் கொள்வதில் தவறில்லை என்பதே வேதமணி வாத்தியார் கருத்து.

கிறித்தவம் என்பது அவர் வாழ்கிற வட்டம். அந்த வட்டத்தை மீறி, அதை ஆன்மீகம் என்று குறிப்பதே சரி; அவர் உள்ளக்கிடக்கை அதுதான். ஆன்மீகம் மத எல்லைகளைக் கடந்தது. எனவே, வேதமணி வாத்தியாரின் கிறித்தவக் கம்யூனிசம் ஒருவகையில் ஆன்மீகக் கம்யூனிசமே.

ஆனால், பிரச்சினை இதுவல்ல. முற்றிலும் வேறானது. மிகவும் கொடுமையான காலக்கட்டத்தைத் தாண்டி தழைத்துவிட்ட கிறித்தவம் - அமைப்பு ரீதியில் ஒரு தேக்க நிலையை அடைந்து விட்டது என்பதே அடிப்படைக் கருத்து. அடுத்த கட்டத்துக்கான வளர்ச்சி நிலைக்கு அது தன்னைத் தயார் படுத்தவில்லை:

கட்டுமானம் என்பது தொடர்பணி என்பதைக் கிறித்தவம் உணரவில்லை. கிறித்தவம் அல்ல, கிறித்தவன் உணரவில்லை. சமூகக் கட்டுமானம் தேவைக்கேற்பப் புதுப்பிக்கப்படுவது; அல்லது புதிது புதிதாய்க் கட்டி எழுப்பப்படுவது. கட்டுமானம் முற்றுப்பெற்று விட்டதாகக் கருதுவது அபத்தம். எந்தச் சமுதாயக் கட்டுமானமும் எந்த நிலையிலும் முற்றுப்

பெறுவதில்லை. திருச்சபையின் கட்டுமானம், ஒரு காலக்கட்டத் தேவை அடிப்படையில் எழுந்தது. ஆனால்.........

திருச்சபையின் மேல்தட்டு மனிதன் தன்னைப் புதிய பிராமணனாகக் கருதத் தொடங்கிவிட்டான்; பூணூல் இல்லையே தவிர, அதுபோன்ற ஒரு குறியீடான சிலுவை - நீண்ட கயிறுகளில் அடையாளச் சின்னமாக நிற்கிறது. பூணூல் எவ்வாறு பிராமணனை வேறுபடுத்திக் காட்டுகிறதோ- சமுதாயத்திலிருந்து அன்னியமாக்குகிறதோ, அப்படித்தான் சிலுவைக் குறியீடும், கிறித்தவனை அன்னியமாக்குகிறது. இந்த அன்னியத்தன்மை இன்னொரு சாதியாகவோ, வர்க்கமாகவோ நிற்கிறது. அந்தச் சாதிக்குள்ளும், வர்க்கத்துக்குள்ளும் இன்னும் பல உள்சாதிகள் எழும்பி விட்டன.

சமூக இயல் அடிப்படையில் நோக்க நாம் முன்னர் சுட்டியது போல, கிறித்தவ மேல் மட்டம், மேல் நிலையாக்கத்துக்குரியதாய் நிற்க, அதே கிறிஸ்தவத்தின் கீழ்மட்டம் தானே கீழ்நிலையாக்கத்துக்குத் (DE-SANSKRITISATION) தள்ளப்பட்டு விட்டது. இந்த விதமான வர்க்கபேதம், ஒருவேளை நிலஉடைமைச் சமுதாயம் - நிலமற்ற சமுதாயம் என்கிற பேதத்தை விடவும், அல்லது முதலாளித்துவச் சமுதாயம் - தொழிலாளர் சமுதாயம் என்ற பேதத்தை விடவும் ஆபத்தானது. எனவே, மேல் நிலையாக்கச் சமுதாயம் - வேறு வடிவிலான முதலாளித்துவ, அல்லது நிலவுடைமைச் சமுதாயமே. அதனால், அதை எதிர்த்து நிற்பதும், அந்தச் சமூக அமைப்பை உடைப்பதும் அவசியமாகிறது. அவ்வாறு, உடைக்கப் படவேண்டும் என்ற கருத்தை வேதமணி வாத்தியார் முன் வைக்கிறார் எனலாம்.

கிறித்தவத்தின் அடிப்படை சமூக மாற்றம்தான். அதைத் திருச்சபை அமைப்பு உணரவில்லை போல் தெரிகிறது. புதியவானம், புதியபூமி என்பது வெறும் கனவு போல் தெரிகிறது. விண்ணரசு என்பது வேறு உலகில் என்ற தத்துவம் பொய்யாகி, விண்ணரசு, மண்ணில் என்ற புதுத் தத்துவம் பிறக்கத் திருச்சபை உதவவில்லை என்கிறபோது, அந்தத் திருச்சபை ஏன்? இயேசு கிறித்துவின் கனவு இந்தத் திருச்சபை அல்லவே! அது உலகம் தழுவிய ஆன்மீக-சமுதாய மறுமலர்ச்சியல்லவா! பொதுவுடைமை வடிவமல்லவா! ஏற்றத்தாழ்வற்ற - வேறுபாடற்ற - உயர்வு தாழ்வற்ற - சாதிகளற்ற மானுடம் அல்லவா!

வேதமணி வாத்தியாரின் கருத்தாக்கம் புதிய சமுதாயமே தவிர - ஏதோ ஒரு கட்சிக்குள் அடங்கிய கருத்தாக்கமல்ல. தத்துவங்களின் இணைவே தவிர, திருச்சபை-கட்சி என்ற நிலையிலுள்ள உருவாக்கமல்ல.

**கீறல்கள், புத்தம் வீடு வேறுபாடு**

புத்தம் வீடு, ஒரு சமூகத்தின் வீழ்ச்சியைச் சொல்லி, அது வீழ்கிற போது இரு சாதிகள் (உள் சாதிகள்) இணைவதைச் சொல்லியது. அதிலும் கூட, இந்த உள்சாதி இணைவுக்கு - வீழ்ச்சியடைந்து, பலவீனமாகிப் போன ஒரு கட்டுமானம் பின்னணியாய் நின்றது. அது மட்டுமல்ல, அந்தக் கட்டுமானத்தின் இரு தூண்கள் சாய்ந்த பின்னரே இரு சாதிகளின் இணைவு சாத்தியமானது.

ஒரு கட்டுமானத்தின் முதல் மனிதனை (கண்ணப்பச்சி) முதியவராக்கி, இயலாதவராக்கி, முடங்கச் செய்து, கண்கள் பஞ்சடைந்தவராய்க் காட்டிப் பின்னர் அந்தக் கட்டுமானத்தின் கடைசி மனிதராக அவரைக் காட்டி - இயலாத நிலையில் ஒப்பந்தத்துக்கோ, சமரசத்துக்கோ, தலைவணங்கச் செய்து சமுதாய இணைவு கூறப்பட்டது.

அதனால்தான், சாவு மட்டுமே புதிய வாழ்வுக்கு இடந்தரக் கூடுமானால், அது சரியான கருவல்ல என்பதை முன்னரே சுட்டினோம்.

கீறல்கள் சாவினால், புதிய சமுதாய அமைப்புக்கு அடிக்கல் போடத் தயாரில்லை. சமுதாய மாற்றம் - அல்லது புதிய சமுதாய அமைப்பு, கோட்பாடு தழுவியதாய் அமைய வேண்டும் என்பதே வேதமணி வாத்தியாரின் உள்ளக் கருத்து. அதன் புதிய பெயரே கிறித்தவக் கம்யூனிசம்; அதாவது, ஆன்மீகக் கம்யூனிசம். அது கடன் வாங்கப்பட்ட தத்துவமோ, கோட்பாடோ அல்ல; காலங்காலமாய் பலரால் வித்தியாசமாய்ச் சொல்லப்பட்டு, ஒரு காலத்தில் தொகுப்புப் பெற்ற தத்துவமே. அதன் வரலாறு, ஆதியிலிருந்தே தொடங்குகிறது. ஓநாயும் ஆடும் ஒரே குட்டையில் நீர் குடிக்கும் என்பதிலிருந்து தொடங்கி, ஒட்டகம் ஊசியின் காதுகளில் நுழையாது என்று வளர்ந்து இறுதி வடிவமாய்ப் பொதுவுடைமை என்று மலர்ந்த மாபெரும் தத்துவம், அல்லது கோட்பாடே அது.

இது சாத்தியமாகுமா என்பது வேறு; ஆனால், இது சாத்தியமாக வேண்டும் என்ற கனவு முக்கியமானது. புதிய சமூக அமைப்பு, எல்லாரும் எல்லாமாய் வாழ்கிற சமூகமே!. இந்தக் கனவை முன்னிறுத்தி முடிகிறது கீறல்கள். அதாவது, கீறல்களை இனி ஓட்டுப் போட்டு அடைத்தால் போதாது, முற்றிலும் உடைத்து விட்டுப் புதிதாய்க் கட்ட வேண்டும்;

இந்தக் கட்டுமானத்துக்குத் திருச்சபை தயாராயிருக்க வேண்டும்; இது வரப்போகிற ஒரு புதிய காலக்கட்டத்தை உள்வாங்கி விளக்கப்பட்டது. அந்தப் புதிய காலக்கட்டம் நிச்சயம் வரும்; அவ்வளவுதான்.

அடுத்த நாவலைப் பற்றிய ஆய்வு மேற்கொள்ளுவதற்கு முன், தமிழ் நாட்டு நிலப்பிரிவுகளைப் பற்றியும், அந்த் நிலப் பகுதிகளில் கிறித்தவம் கால் கொண்டதையும் முன்னுரையாக நோக்க வேண்டியுள்ளது.

தமிழகம் மேற்குத் தொடர்ச்சி மலையின் கிழக்கேயும், மேற்கேயும் உள்ளது.

மேற்குத்திசை  கிழக்குத் திசை

மலை

குமரிக் கடல்

இரு தமிழக நிலப்பிரிவிலும் ஒரு சிறப்புக் கூறுபாடு நோக்கத்தக்கது.

மலையிலிருந்து ஒரு நேர்கோடு இழுத்தால் அது கடலில் போய்ச்சேரும். அது இரு தமிழகங்களுக்கும் பொதுவாயமைந்த சிறப்புக் கூறுபாடு. இந்த நேர்க்கோட்டை நான்கு பகுதிகளாகப் பிரித்துவிட முடியும்.

(1) மலையும் மலைப் பகுதியும் (குறிஞ்சி)

(2) காடும் காட்டுப் பகுதியும் (முல்லை)

(3) உள்நாடும் உள்பகுதியும்; அல்லது வயலும் வயல் பகுதியும் (மருதம்)

(4) கடலும் கடல் பகுதியும் (நெய்தல்)

மலை

கடல் நெய்தல் மருதம் முல்லை குறிஞ்சி | குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் கடல்

கிறித்தவத்தின் வளர்ச்சியை இந்த நானிலப் பிரிவுகளோடு தொடர்பு படுத்தலாம். முதலில் வசதிக்காகக் கடலிலிருந்து வரலாம்.

கடற்கரைப் பகுதிகளில் கத்தோலிக்க கிறித்தவம் வேரூன்றியது. மருத நிலத்தில், தாழ்ந்த சாதி (இன்று தலித்துக்களாய் அறியப் படுகிறவர்)கள் மத்தியில் கிறித்தவம் வேரூன்றியது. இந்த மக்கள் பெரும் பான்மையும், லூத்தரன் சபை, இரட்சண்ய சேனைக் கிறித்தவர்கள். சிறுபான்மை, தென்னிந்தியத் திருச்சபைக் கிறித்தவர்கள். நாடார்கள் மருதநிலத்தில் குடியமைப்பு கொண்டதற்குப் பின்னர், பெரும்பான்மை நாடார்கள் தென்னிந்தியக் கிறித்தவச் சபைக்குள் வந்தார்கள்.

முல்லை நிலத்தில் காணிக்காரர்கள், மலை சாதியினர் ஒரு பகுதி கிறித்தவத்தைத் தழுவினார்கள். முல்லைப் பகுதியில் நாடார்கள்

குடியமைப்புக் கொண்ட பின்னர், அவர்கள் தென்னிந்தியக் கிறித்தவச் சபையைத் தழுவினார்கள்.

குறிஞ்சி நிலம் ஆதி காலத்தில் மலைச் சாதியினரின் களமாகவே இருந்தது. போகப் போக மருதநிலச் செல்வந்தர்கள் குறிஞ்சி நிலப் பகுதிகளைக் கைப்பற்றினர்; ஆனால் குடியேறவில்லை. குமரி மாவட்டத்துக் குறிஞ்சி நிலம் தம்புரான்களின் கைவசமிருந்தது.

சுந்தர ராமசாமியின் ஒரு புளியமரத்தின் கதை, உள்ளூரில் புதிய குடியிருப்புத் தோன்றியதை விளக்கும் கதை எனலாம். எப்சிபா ஜேசுதாசனின் 'புத்தம் வீடு' முல்லைப் பகுதி திருத்தப்பட்டு, நாடார்கள் குடியமைப்பு தோன்றி, கிறித்தவம் காலூன்றிய பின் உள்ள ஒரு கதை எனலாம்.

கடற்கரைப் பகுதியில் கதை இதுவரை எழுதப்படவில்லை என்பது ஒருகுறை. ஆனால் மீரானின், 'ஒரு கடலோர கிராமத்தின் கதை'. முஸ்லீம் மக்களை மையமாகக் கொண்டு எழுதப்பட்டது. பெரும்பான்மை கிறித்தவர்களை விவரிக்கிற கடற்புறக் கதை குமரி மண்ணில் இனிதான் எழுதப்பட வேண்டும்.

சமீபத்தில் வெளிவந்த 'ரப்பர்' நாவல், குறிஞ்சி - மலைப் பகுதியில் கிறித்தவர்களின் கதையை விளக்குகிறது.

**'ரப்பர்' நாவல்**

ரப்பர் 1990 ஆம் ஆண்டு வெளியான நாவல். ஜெயமோகன் திருவட்டாறு பகுதியைச் சேர்ந்தவர். எனவே, மலைப் பகுதியில் நாயர்கள்- தம்புரான்களின் வாழ்க்கை அவருக்கத் தெரிந்திருந்தது. அதோடு அவரே நாயர் குடும்பத்தைச் சார்ந்தவர் என்பது கூடுதல் தேர்ச்சி ஆகும். அதனால் உள்ளதை உள்ளவாறு அவரால் சொல்ல முடிந்தது.

ரப்பர் நாவல் தம்புரான்களிடமிருந்து மலைப் பகுதிகள் எவ்வாறு நாடார்கள் கைக்கு மாறியது என்பதை அழகாகச் சொல்லுகிறது எனலாம். இதுவும், ஒரு மாற்றுக் காலகட்டத்தைக் குறிக்கும் நாவல்தான். இந்தக் கதையை மிகவும் நேர்மையோடும், காழ்ப்பின்றியும், நடுநிலையோடும் அவர் கூறுகிறார் என்பது - ஒரு எழுத்தாளனின் தார்மீகத்திலிருந்து மாறுபடாமல் கூறுகிறார்- என்பது கவனிக்கத்தக்கது.

குமரி மாவட்ட மலைப் பகுதியில் ஏற்பட்ட இந்த மாற்றுக் கால கட்டத்தை, இவருக்கு முன்பே வாசுதேவன் நாயரின் 'அக்கானி' என்ற மலையாள நாவல் கூறியது. அந்த நாவலும் நாயர்களின் மேலாண்மை வீழ்ச்சியைத்தான் குறித்தது. அது மலையாளத்தில் அத்துணைக்குப் பிரபலமாகவில்லை.

ஆனால் தமிழில் வெளி வந்த 'ரப்பர்' பிரபலமாகியது. ரப்பர் பிரபலமாவதற்குக் காரணம், ஜெயமோகன், மலைப்பகுதி வாழ்க்கையை நேரடியாக அறிந்தவர் என்பது மட்டுமல்லாது - அவருக்குரிய நேரடி அனுபவங்களோடும் இந்த நாவல் சம்பந்தப்பட்டது என்பதுதான்.

**'ரப்பர்' நாவலில் சமூக வரலாற்றுப் பின்னணி**

காலனி ஆட்சி ஏற்பட்டதற்குப் பின்னர், மலைகளுக்கு மேல் சாலை வசதிகள் ஏற்பட்டன. ஏறமுடியாத மலைகளுக்கு மேல் அமைந்த சாலைகள் மலையின் வளங்களைச் சுரண்டுவதற்கு ஏதுவாயிருந்தது. இதில் மிஷனரிகளின் பணி ஒன்றுமில்லை. இது ஆங்கில ஆட்சியாளர்களின் மகத்தான பணி. வளங்களைச் சுரண்டுவதற்குப் போடப்பட்ட இந்த மலைச் சாலைகள் - எந்த நோக்கத்தோடு போடப்பட்டன - என்பதை மறந்து விட்டால், மகத்தான பணியாகும். இந்தச் சாலைகள் போடப்பட்ட பின்னர், தொழில்கள் கூடின; மலைகளுக்கு மேலாய் மாற்றங்கள் ஏற்பட்டன. மலைப் பகுதிகள் 'எஸ்டேட்' என்ற புதுப்பெயரில் பொலிவு பெற்றன.

ஆங்கிலேயர்கள் இந்த எஸ்டேட்டுகளை விலைக்கு வாங்கி, அல்லது பட்டாவின் பெயரால் உரிமை பெற்று 'காஃபி' பயிர் செய்தார்கள். இதுபோக எற்கனவே நிறைந்து கிடந்த தேக்கங்காடு (TEAK FOREST) லாபம் தரும் வியாபாரமாக இருந்தது.

ஆங்கில ஆட்சிக் காலத்தில் நாயர்கள் எஸ்டேட் உரிமையாளர்களாகி யிருந்தனர். அவர்களின் உழைப்பு மேலாண்மை சார்ந்தது (MANAGEMENT). களத்தில் இறங்கி வேலை செய்யக் கூடிய மனநிலை குறைவு. எஸ்டேட் வேலைக்கு குடியேறிய நாடார்கள் - பின்னொரு காலத்தில் - எஸ்டேட்கள் தங்கள் கைக்கு வரும் என்று எதிர்பார்த்ததில்லை.

நாடார்கள் எஸ்டேட்டில் குடியேறியதற்கு ரப்பர் 'நாவல்' குன்னத்துக்கல் கலவரம் காரணம் என்று குறிக்கிறது. அதை ஏற்பதில் பிரச்சினை இல்லை. நாடார்கள் உழைப்பாளிகள்; அவர்களின் உடல் 'வாகு' அதற்கு உதவியது. இதில் கூட மேல்சாதி, கீழ்ச்சாதி வேறுபாடு அறிய முடியும். மேல்சாதி, உழைக்காத, மேலாண்மைச்சாதி; கீழ்ச்சாதி உழைக்கிற அடிமைச் சாதி. இது மரபு தழுவிய ஓர் உண்மை. இந்த மரபு ஒடிக்கப்பட்டு, உழைக்கிற சாதி நிலஉடைமை பெறுகிற ஒரு காலகட்டம் கதையில் பின்னப்படுகிறது.

தம்புரான்களின் மேலாண்மை வீழ்ச்சியும், உழைக்கிற நாடார்களின் புதிய வளர்ச்சியும் சிறப்பாக நாவலில் அமைந்துள்ளது. எஸ்டேட்டுகளில் கூலிகளாகவோ, அடிமைத் தொழிலாளிகளாகவோ நுழைந்த நாடார்களில்

பெரும்பான்மையோர் கிறித்தவ நாடார்கள். மிஷனரிகள் எஸ்டேட்களில் வந்து தங்கி சமயப் பணி தொடங்கிய போது, மலையடிவாரங்களிலும், மலை உயர்வுகளிலும் கிறித்தவக் கோயில்கள் தோன்றின. சிறிய தொடக்கப் பள்ளிகள் தொடங்கப்பட்டன.

இந்தப் பள்ளிக்கூடங்களில், இந்த மூத்த நாடார்கள் படிக்கவில்லை. இவர்களின் பிள்ளைகளே படித்தார்கள். ஆனால், இந்தப் பள்ளிகள் கிறித்தவ நாடார்களின் வாழ்க்கையில் சில மாற்றங்களை ஏற்படுத்தின. அதோடு, கோயில் ஆராதனைகள் - அருளுரைகள் அனைத்தும் இன்னொருவிதமாக கல்வியை இவர்களுக்குத் தந்தது.

இசுரவேல் மக்களின் கடின உழைப்பும், சோதனைகளும், துன்பங்களும், உயர்வும் இவர்களுக்குச் சில உண்மைகளைக் கற்றுத்தந்தன.

மண்வெட்டிகளை நம்பி வாழ்ந்த நாடார்கள் மனஇயல் அடிப்படையில் ஒரு நம்பிக்கைக்கு ஆட்படுத்தப் பட்டார்கள். அந்த நம்பிக்கை மிஷனரி பணியால் ஏற்பட்டதே.

அடிமை வாழ்வு, ஒடுக்கப்பட்ட, நசுக்கப்பட்ட வாழ்வு, இதன் நடுவிலும் வருங்காலம் பற்றிய ஒரு நம்பிக்கை ஏற்பட்டிருந்தது. கீழ்ச்சாதிக்கே உரிய தாழ்வு மனப்பான்மை (COMPLEX-I) அறவே நீங்கியிருக்கா விட்டாலும், நீங்கத் தொடங்கியிருந்தது. இந்த விதமான ஒரு கலாச்சார மாற்றம் இவர்களைக் கொஞ்சம் கொஞ்சமாக, படிப்படியாக முன்னேற வைத்தது.

ஆடம்பர வாழ்க்கையாலோ, திட்டமிடாத பொருளாதாரத்தாலோ, உழைப்பில்லாமையினாலோ, மிகையான பாலுணர்வுகளினாலோ, தம்புரான் குடும்பங்கள் சரியத் தொடங்கிய போது, நாடார்கள் எளிதாக அவர்களின் எஸ்டேட்களைக் கைப்பற்றிக் கொண்டார்கள்.

உழைப்பில்லாதவர்களால், எஸ்டேட்களில் தொடர்ந்து மேலாண்மையை உறுதிப்படுத்திக் கொள்ள முடியவில்லை என்று கூறலாம். இதன் விளைவு, ஒரு நிலஉடைமைச் சமூதாயம் சிதைந்து, உழைக்கிற வர்க்கத்தின் கைகளில் நிலஉடமை தானே கையளிக்கப்பட்டது. நாடார்கள் எஸ்டேட்களில் உரிமை பெற்று, உழைப்பால் உயரத் தொடங்கிப் 'பெருவட்டர்களாக' மாறினார்கள். இந்தப் பெருவட்டர்களாக மாறிய கிறித்தவ நாடார்களின் கதை, குறிப்பாக ஒரு குடும்பத்தின் கதையாக ரப்பரில் விரிகிறது எனலாம்.

வே. வீராசாமி இப்படி எழுதுகிறார்: "ஒன்றுபட்ட குடும்பத்தினர் பணத்தாசையாலும் பகட்டு வாழ்க்கையாலும் ஒருவரின் இரத்தத்தை ஒருவர் குடிக்கப் போட்டி போடத் தலைப்பட்டனர். அரசியல் பதவிகள் அதற்குரிய

பகடைக் காய்களாக மாறின. இத்தகைய நிலைகளைத் தென் தமிழகம் என்ற பண்டைய திருவாங்கூர் நிலப் பரப்பிலே பதித்துக் கிளைவிடச் செய்கிறது ஜெயமோகனின் 'ரப்பர்' " 'ரப்பர்' - பக்:3.

இது, பெருவட்டர்களின் வாழ்க்கையைப் பற்றி வே. வீராசாமி குறித்தது. இதுவே தம்புரான்களின் வீழ்ச்சிக்கும் பொருந்தும். பகட்டு வாழ்க்கை, ஒருவரின் இரத்தத்தை மற்றவர் குடிக்கப் போட்டி போட்டதன் விளைவு - ஒரு பழைய மரபு வீழ்ச்சியடைகிறது. அதே காரணங்களே, புதிய மரபின் வீழ்ச்சிக்கும் காரணமாகிறது.

## பொன்னுமணி பெருவட்டர்

வே. வீராசாமி இப்படி எழுதுகிறார் "குன்னத்துக் கல்லிலிருந்து புறப்பட்ட நான்கு வயது பொன்னுமணியின் குடும்பம், நாயர்களின் வாளுக்கு இரையானாலும், பொன்னுமணி மட்டும் எப்படியோ தப்பி, தம்புரானின் பன்றிமலைக் காட்டைப் பெற்றுப் புதுக்கி ரப்பர் தோட்டமாக்கிப் புது வாழ்வு கண்ட நிலை பெரியதோர் புராணம் போல் விளங்குகிறது." (பக்:3)

தென் திருவாங்கூர் நிலப்பரப்பில் 'குடியான்' கலவரம் குறிப்பிடத் தக்கது. நாயர்களும், நாடார்களும் மோதிக்கொண்ட அந்தக் கலவரத்தில், குன்னத்துக்கல் நாடார்கள் அகதிகளாய்க் குடிபெயர்ந்தார்கள். நாயர்கள் கும்பல் கும்பல்களாய் வந்து தப்பியோடிய நாடார்களை வெட்டிச் சாய்த்தார்கள்.

வே. வீராசாமி இப்படி எழுதுகிறார்:

"அந்தக் கால நாயர்கள் கீழ்ச்சாதி பெண்களை, மானம் காக்கும் வகையில் மேலாடை அணியக்கூட அனுமதிக்கவில்லை. கிறிஸ்தவ மதம் பரவி கல்வி ஊட்டியபோது, தாங்களும் மனிதர்கள்தாம் என்ற உணர்வு பெற்று எழுச்சியடைந்த போது தெருத் தெருவாக நாடார்களை வெட்டிச் சாய்த்தனர். ஆனால் காலம் மாறிய போது, பெருவட்டர்களின் வயலில் நாயர்கள் கூலிகளாக வேலை செய்ய நேர்ந்ததையும் வரலாறு கூறும்." (பக்:4)

பெருவட்டரைப் பற்றிப் பேரன் ஃபிரான்சிஸ் இப்படி நினைக்கிறான்- "தாத்தா ஒரு கருங்கல் கோபுரம்; பயம், சோகம், முதலான அற்ப உணர்வுகளுக்கு அப்பாற்பட்ட மாமனிதர்." இன்று பெருவட்டருக்கு வயதாகிவிட்டது. படுக்கை. ஃபிரான்சிசுக்குத் - தாத்தாவைப் பற்றி பாட்டி மூலம் கேள்விபட்டவை ஞாபகத்துக்கு வருகின்றன.

"குடியான் ரகளையின் போதுதான் குன்னத்துக் கல்லிலிருந்து தாத்தாவின் குடும்பம் அகதிகளாக இடம் பெயர்ந்து வந்தது........ வழியில்

நாயர்கள் கும்பலாக வந்து தாக்கித் தாத்தாவின் குடும்பமே பாக்கியில்லாமல் கொலையுண்டது. தாத்தா மட்டுமே எப்படியோ தப்பித்துக் கொண்டார்". (பக்:46)

வே. வீராசாமி முன்னுரையில் கூறியது இந்தச் செய்தி தான். நாயர்களின் கொடி குமரி மாவட்டத்தில் பறந்து கொண்டிருந்த போது, நாடார்களுக்குப் பாதுகாப்பு இருந்ததில்லை. கண்ட மேனிக்கு வெட்டப் பட்டார்கள் என்ற செய்தியை வேறு யாரேனும் நாவலில் கூறியிருக்கும் பட்சத்தில் ஒதுக்கிவிடலாம். ஆனால், ஜெயமோகன் கூறுவதை ஒதுக்கி விட முடியாது. இது தார்மீக உணர்வோடுதான் கூறப்படுகிறது. ஜெயமோகனைக் கூர்ந்து படிப்பதற்கு இந்தத் தார்மீக உணர்வும் ஒரு காரணமாக நிற்கிறது.

அப்புறம் நாயர்களின் வீழ்ச்சியைக் கூறும் போது ஜெயமோகனிடம் பதட்டமில்லை. ஒரு சாம்ராஜ்யம் சரிந்து விட்டதற்காகக் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. அந்தச் சாம்ராஜ்யம் சரிந்ததற்குப் பின்னணியாக அமைந்த கிறித்தவத்தைத் தாக்கக் கூடிய மனோ நிலையும் அவரிடம் இருந்ததாகத் தெரியவில்லை. டால்ஸ்டாயின் தாக்கத்தோடு, புதிய ஏற்பாட்டு மேற்கோள்களைத் திறம்பட எடுத்துக் காட்டுகிறார். கதை கூட அந்தச் செய்தியை வலியுறுத்துவது போலவே தெரிகிறது. மூன்றாம் அதிகாரத்திலிருந்து தான் பெருவட்டர், எப்படி பெருவட்டரானார் என்ற கதை சொல்லப்படுகிறது. கதை இப்படித் தொடங்குகிறது:

"தோட்டம்" என்று ஆங்கில எழுத்துக்கள், பொறிக்கப்பட்ட இரும்பு கேட் திறந்து கிடந்தது. டிரைவர் ஹாரனை ஒரு முறை அழுத்திவிட்டு காரை, சாலையிலிருந்து திருப்பி நுழைந்தான். கப்பிக்கல் பாதை மீது பரவிக் கிடந்த ரப்பர் சருகுகள் சரசரவென்று நெரிந்தடங்கி, காருக்குப் பின்னால் தவித்தபடி ஓடிவந்து, மெல்ல அமைதியடைந்து படிந்தன. வளைந்து சென்றது பாதை; தார்ச்சாலையின் வெயிலை முற்றுமாக மறக்கடிக்கும் குளிரான இளம் இருட்டு. காய்ந்து கொண்டிருக்கும் ரப்பர் பாலின் மாமிச மணம். ரப்பர் மரங்கள் உடல் முழுக்க வடுக்களுடனும், கரிய கறைகளுடனும், வரிசை வரிசையாக, ராணுவ அணி வகுப்புப் போல, பின்னால் நகர்ந்து மறைந்தன. கிளைகள் நெருங்கி இலைகள் கரை போல அடர்ந்து பரந்திருந்தன. காற்றின் பாய்ச்சலில் இலைப் பரப்புக்கு மேலே, சலசலப்பொலி கேட்டது. வற்றிப் போன நீரோடையின் விளிம்பு போலச் சற்றுத் தாழ்வான பாதையின் விளிம்பில் வேர் நுனிகள் அடர்ந்து தெரிந்தன. (பக்:9.)

வே. வீராசாமி இப்படி எழுதுகிறார்: "இந்த மண்ணில் இதுவரை இல்லாத மரம் ரப்பர் மரம். அதனை மழை நிறைய பெய்யும் தென்பகுதிக்குக்

கொண்டு வந்ததற்கு அடிப்படைக் காரணமே இலாப நோக்கம்தான்: அதனால் மலையின் முகம் மாறியது. காடுகள் தங்கள் கோலத்தை மாற்றிக் கொண்டன. காடெல்லாம் ரப்பர் தோட்டமாக மாறின. மலைகளில் ஒரே மரம்; ஒரே சருகு; ஒரே வேர். எனவே இயற்கையின் சமநிலை மாறிற்று. ஆறுகளில் நீரில்லை. மலையில் ஈரமில்லை. இதற்கெல்லாம் காரணம் ரப்பரின் வரவு. ரப்பரால் நாட்டின் தட்பவெப்ப நிலையும் மாறிவிட்டது. இந்நிலையில் ரப்பர் என்ற குறியீடு, வாழ்வின் மாற்றத்தைக் காட்டி, மனித அவலத்தைப் படம் பிடித்துள்ளது. ரப்பர் என்பது பணம். பணத்தின் வளர்ச்சி; மனித இயற்கையின் அழிவு - என்பனவற்றைக் குறியாமல் குறிக்கின்றன." - பக்:4.

எஸ்டேட் தோட்டத்திற்குள் பொன்னுமணி பெருவட்டரின் அரண்மனை போன்ற வீடு; சுற்றிலும் ரப்பர் மரங்கள். 'பிரிட்டீஷ் மோஸ்தா' கட்டடத்தின் புழக்கடையில் மட்டுமே வாழையின் இலை தெரிகிறது. வீடு சரியாக வர்ணிக்கப்படுகிறது. பெருவட்டர் என்றால் சாதாரணமா? ஆனால் ரப்பரும். வாழையும் குறியீடாகப் பழைமையையும். புதுமையையும் காட்டுகின்றன. வாழை சுருங்கி விட்டது; ரப்பர் பெருத்து விட்டது.

தம்புரான்கள் கையில் எஸ்டேட் இருந்த போது வாழைகள் பெருத்திருந்தன. பெருவட்டரின் கைக்கு எஸ்டேட் வந்த போது ரப்பரின் ஆக்ரமிப்பு. ஆனாலும் பழமைச் சின்னமாக இப்போதும் வாழையின் இலை - புழக்கடையில் தெரிகிறது. பெருவட்டர் படுக்கையில் கிடக்கிறார் - வயதாகிவிட்டது. இப்போது அவரின் தோற்றம் -

"பெரிய விலா எலும்புகள் வரிவரியாகப் புடைத்த மார்பும்; எலும்புகள் புடைத்து இறுகிய தோள்களும் தெரிந்தன. நுணுக்கமாய் அடர்ந்த தோல் சுருக்கங்கள்.........விரல்கள் கோணலாக விலகி வளைந்திருந்தன". - பக்:14.

அவரைச் சோதிக்கிற டாக்டர் ராம் நினைக்கிறான்-

"அவரது காலகட்டத்தில். முதல் பார்வையிலேயே ஒருவனைச் சில்லிட வைக்கும் ராட்சச உருவினனாக அவர் இருந்திருக்க வேண்டும்" - பக்:14.

பெருவட்டர் சாவை எதிர்ப்பார்த்துக் கிடப்பது தெரிகிறது. "ம்ம்......மொகமும் பாதமும் வீங்கினா. காலன் வாற சமயம் ஆச்சிண்ணு சொல்லுவாவ, வரட்டும். ம்ம்......வந்தா கொண்டு போவான். செய்யிறதுக்கு இன்னி இஞ்ச ஒண்ணும் பாக்கி இல்ல." பெருவட்டர் டாக்டரிடம் கூறும் விரக்தி வார்த்தைகள் இவை.

ஒரு முக்கியமான கட்டத்துக்கு வருகிறோம். பெருவட்டரின் பேரன் டாக்டரை 'கார்' வரைக்கும் கொண்டு விடுகிறான். வேலைக்காரி தங்கம் -

நாயர் பெண் - மரக்கறி பொட்டலத்தைக் கொண்டுவர டிரைவர் அதை வாங்கிக் காருக்குள் வைக்கிறான். கார் வளைந்து முன் நகர்ந்த போது டாக்டர் ராம் எதேச்சையாக அதைக் கண்டான். பேரன் லிவிங்ஸ்டன், வாசலில் கையைக் குறுக்கே வைத்தபடி நின்று கொண்டிருந்தான். அவள் உள்ளே நுழைகையில், அவன் ஏதோ குறும்பு செய்ய முயல்வது தெரிந்தது. டிரைவரும் அதைக் கவனித்து விட்டுச் சொல்லுகிறான்-

"அந்தப் பொண்ண பாத்தியளா?"

"ஆமா அவளுக்கு என்ன?"

"அவ, அறைக்கல் குடும்பத்துப் பொண்ணாக்கும்"

"அறைக்கல்லா?"

"இந்த ஊர் ராஜவம்சம் சார்; இந்த ஏரியாவே முன்னே அறைக்கல் குடும்பச் சொத்துதான் - காலம் போற போக்குகளப் பாருங்க......"

அறைக்கல் நாயர்களின் குடும்பச் சொத்து மாத்திரமல்ல, குடும்பப் பெண்கூட இன்று பெருவட்டர் வீட்டுச் சொத்தாகிவிட்ட அவலம் தெரிகிறது.

வருந்தத்தக்க இந்தச் செய்தி ஒரு சாதாரண நிகழ்ச்சியாகவே சொல்லப்படுகிறது. ஒருவேளை, நாயர்கள் கோலோச்சிய காலத்தில் நாடார் பெண்களுக்கு இத்தகைய கதி நேர்ந்திருக்கலாமோ? காலம் பழிவாங்குகிறதோ? ஆனாலும் எழுத்தாளன் சத்தியத்துக்குக் கட்டுப்பட்டே இந்த நிகழ்ச்சியைக் கூறியிருக்க வேண்டும்.

"சத்தியத்தின் ஒளியுடன் எழுத வேண்டும் என்று ஆசைப் படுகிறேன்" - 'நானும் நாவலும்' முன்னுரை.

பரந்த நோக்கில் சத்தியத்துக்கு வேறு பொருள்கள் இருக்கலாம். ஆனால், இங்கு ஏதோ ஒரு சத்திய நிகழ்ச்சி, நெருடலாய் விவரிக்கப் படுகிறது. அறைக்கல் நாயர்களின் வீழ்ச்சி; அது கூட நில உடைமை, முதலாளித்துவச் சமுதாயத்தின் வீழ்ச்சிதான். அந்த அதிகாரங்களும், ஆணவங்களும், அடங்கிப் போய், குடும்பப் பெண் வேலைக்காரியாகி நிற்கிறாள். ஏதோ ஒரு 'தொனி' நம்மை வதைக்கிறது.

விதியின் மேல் பழி போடுவதோ, காலத்தின் மேல் பழி போடுவதோ அல்ல; கவனமாகக் கணக்கு பார்த்தால், வேறு காரணங்கள் விளங்கக் கூடும். அது தத்துவார்த்தமான - அதைவிட ஆழமான காரணமாக இருக்கும்; 'ஆசையை அறு', என்பது சாதாரண அறிவுரை ஆகலாம்; ஆனால், அது கூட வேறுவகை அலங்கார மொழியில் கூறப்படுவது இன்னும் சில அழுத்தங்களைக் காட்டும்.

"ஆகாயத்துப் பறவைகள் விதைப்பதில்லை......" இந்த விளக்கம் நாவலில் பாவிகமாக வருதலைக் காணமுடிகிறது. இதன் ஆழத்தை நாம் பின்னர் கவனிக்கலாம்.

பெருவட்டர் அதிகாலையில் விழித்துக் கொண்டார். அவர் தலைமாட்டில் குஞ்சிமுத்து படுத்திருந்தான். அவனை உதைக்க வேண்டும் போலிருந்தது. ஆனால்...... 'அவரது கால் குனிந்து. தனித்த ஒரு பொருள் போல் விலகிக் கிடந்தது'. "குஞ்சி, எலேய் குஞ்சி!" என்று அழைத்தார்.

அதற்குள் தொழுவத்தில் பசுக்களைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை; ஆனால் முடியாதே-

'எலேய் குஞ்சி!'

அவன் விழித்துக் கொண்டான்.

"வெளக்க போடுல நாயே!"

"பெருவட்டரே!"

"வெளக்கப் போடுல நாய்க்குப் பெறந்த பயல!"

விளக்கைப் போட்ட பின்னர் மெழுகுவர்த்தியை ஏற்றி மேசைக்கு அடியில் வைக்கச் சொல்லுகிறார். மெழுகுவர்த்திகள் அறைக்குள். சுடர் அடையத் தடுமாறின. பெருவட்டரின் கடைசிக் கால மனநிலைகளை அழகாகவே காட்டுகிறார் ஜெயமோகன். மெழுகுவர்த்திச் சுடர் குறியீடாக நிற்கிறது.

இதற்குள் பெருவட்டர்.

"பிராஞ்சிய விளில!" என்கிறார்.

அவன். பேரன் ஃபிரான்சிசை அழைக்கிறான். ஃபிரான்சிஸ் வர.

"ராத்திரி எப்பம்பில வந்தே?"

"கொஞ்சம் பிந்தி போட்டு!"

"எங்கயாக்கும் சர்க்கிட்டு?"

"பேணு எஸ்டேட்டில!"

"ம்......ஒண்ணும் ஆரும் அறியலேணு நெனைச்சாண்டாம்......கூடிப் போவப்பிடாது. கேட்டியா!"

கூடிப் போவதால்தான் அழிவு வருகிறதோ? அப்படித்தான் போலும்! எல்லாம் கூடிப் போகப் போக, விளைவு மோசமாகிக் கொண்டிருக்கிறது. அப்புறம். விதி. கிதி என்று காரணம் கற்பிக்க வேண்டியதாகிறது.

"பிலேய் பிராஞ்சி, செண்ணு, ஓதேசிய கூட்டிக்கிட்டு வாயில."

விடிந்த பிறகுதான் பாஸ்டர் ஜோசப் ராஜேந்திரன் வந்தார். அவர் வந்தது பற்றிய ஒரு மினுக்கான வருணனை உள்ளது.

"பிரான்சிஸ், அவரைக் காரில் அழைத்து வந்தது அவருக்கு மிகுந்த திருப்தியைத் தந்தது. வரும் வழியில் ஜன்னலோரமாய் அமர்ந்து, கண்ணில் பட்டவர்களுக்கெல்லாம் சிரித்தபடி கும்பிட்டும், ஸ்தோத்திரம் கூறியும், நலம் விசாரித்தும், முகமன் செய்தார். புதிய பாலிஸ்டர் அங்கியும், அதன் மீது ஏழு பவுன் தங்கச் சங்கிலியும், அணிந்து, தங்க விளிம்பு போட்ட மூக்குக் கண்ணாடி வைத்திருந்தார். அப்பமும், புனித நீரும் அடங்கிய பையும், பைபிளும், அவர் மடிமீது இருந்தன. வந்து சோபாவில் அமர்ந்த உடனே சூடாக காபி கிடைத்ததில் அவர் மேலும் மகிழ்ச்சியடைந்தார்." -(பக்:27.)

இது அவ்வளவு எளிதான இடமில்லை. இதில் அடங்கிய செய்திதான் என்ன? திருச்சபை தொடங்கிய காலக்கட்டத்திற்கும், அது வளர்ச்சி பெற்று அமைப்பாய் உருவாகிய காலக்கட்டத்திற்குமுள்ள வேறுபாடு உணர்த்தப் படுகிறதா? அல்லது, நில உடைமைச் சமுதாயம் அல்லது முதலாளித்துவச் சமுதாயம் போன்ற - இன்னொரு வகையான 'பாஸ்டர்' சமுதாயம் காட்டப் படுகிறதா? அல்லது மிக நுட்பமாக, கிறித்தவம் தோற்றுக் கொண்டிருக்கிறது, நிலஉடமை சமுதாயம் வீழ்ச்சியடைவது போல இதுவும் வீழ்ச்சியடைந்து கொண்டிருக்கிறது என்று சொல்லப்படுகிறதா! அல்லது முதலாளித்துவச் சமுதாயத்தின் போலித் தனங்களைப் போல் பாஸ்டர் சமுதாயத்தின் போலித் தனங்கள் தோலுரிக்கப்படுகின்றனவா!

எது எப்படியிருந்தாலும், இதில் ஒருவகையான வீழ்ச்சி காட்டப் படுகிறது எனலாம். இது ஆரம்பத் திருச்சபைக்கும், இப்போதுள்ள திருச்சபைக்குமான இடைவெளி.

ஒரு பாஸ்டரின் ஏழு பவுன் தங்கச் சங்கிலி மாட்டுத் தொழுவத்துக்கு முரணானது. ஆடம்பரம், நில உடைமைச் சமுதாயத்தின் விளைவு; அது ஒரு பாஸ்டரைக் கூடப் பாதிக்கிறது. இதனை நில உடைமைச் சமுதாயத்தின் நிழல் என்று கூறலாம்.

அப்புறம் பெருவட்டரைப் பாஸ்டர் சந்திக்கிற இடம், இன்னும் சில செய்திகளைச் சொல்லுகிறது. காலக்கட்ட மாற்றம் 'பாஸ்டர்' என்ற புனித பதவிகளையும் கூட விட்டு வைக்கவில்லை. 'ஒரு கன்னத்தில் அறைந்தால் இன்னொரு கன்னத்தைக் காட்டுகிற' அந்த மனப் பக்குவத்தை இழந்துவிட்ட ஒரு போலிக் காலக்கட்டம் நிகழ்ந்து கொண்டிருப்பதாகக் கருத முடிகிறது.

பாஸ்டர், பெருவட்டரைத் தனியாகச் சந்திக்க நினைக்கிறார். எனவே ஃபிரான்சிசும், குஞ்சிமுத்தும் விலகிக் கொள்ளுகிறார்கள்.

பாஸ்டரின் தோரணை பெருவட்டர் முன் தோற்றுப் போனது. அவர் கழுத்தில் சிவப்பு ரிப்பனைப் போட்டுக் கொண்டார். ஆனால் பெருவட்டருக்குப் பாஸ்டரைப் பிடிக்கவில்லை. ஒருவேளை பெருவட்டர் பார்க்க நினைத்த 'உபதேசியார்' இவரில்லையோ என்று தோன்றுகிறது.

இந்த பாஸ்டர் யார்? இவர் கத்தோலிக்கரா, எதிர்த்திருச்சபைக் காரரா? 'பெந்தேகோஸ்தே'யா? தெளிவில்லை. புனித நீர் கொண்டு வந்தார் என்பது குழப்பத்தை ஏற்படுத்துவது. ஒருவேளை, இவர் மூன்று சபைகளின் பிரதிநிதியாகக் காட்டப்படுகிறாரா? ஆனால் முடிவில், "இது சர்ச்சுக்குத் தெரிந்தால் என்ன ஆகும் தெரியுமா?" என்று ஃபிரான்சிசிடம் கூறுவது. இவர் எதிர்த்திருச்சபைக்காரர் என்பதை ஓரளவு தெளிவு படுத்துகிறது.

பெருவட்டரின் அறையில் என்ன நடந்தது?

"சீ, நாயே போல வெளியே!" என்று கத்தினார் பெருவட்டர்.

"என்னது?" என்றார் பாஸ்டர்.

"போல வெளியே, பட்டி களுவேறிக்க மோனே! சவிட்டி எல்ல பிடுங்கிப் போடுவேன்..........வந்திருக்கான்!"

"கொஞ்சம்..........கொஞ்சம் நிதானமா?"

"ஓடுலே! நீ இஞ்ச ஒண்ணும் செய்யாண்டாம்........தெண்டி!"

பாஸ்டர் எகிறத் தொடங்கினார்.

"நாக்க அடக்கும் வேய்! என்னவே, சும்மா நின்னா தலையில கேறுதீரே! இல்ல, தெரியாமத்தான் கேக்குதே! நீரு ஆருகிட்டவே பேசுதீரு?"

பெருவட்டர் ஃபிரான்சிசைக் கூப்பிடுகிறார். அவன் ஓடி வருகிறான்.

"பிலேய், இவன ஆருல கூட்டிக்கிட்டு வந்தது? பிச்சக்காச குடுத்து வெரட்டுல இவனே."

"வேய், நானும் செளியில நீந்தி வளர்ந்தவன்தாவே, ஒம்ம காட்டியும் வாத்தயப் போடத் தெரியும் வே!"

"வெளில போல, நாய்க்குப் பொறந்த பயலே!"

ஃபிரான்சிஸ் அவரை வெளியே கூட்டிப் போய் சமாதானம் பேசுகிறான். எடுபடவில்லை.

"அவியளுக்கு சொகமில்ல"

"மனசு செரியில்லெங்கி வல்ல குருசடியிலயும் கொண்டு ...........தள்ளணும்"

"மன்னிச்சிடுங்க ஃபாதர்!"

"இது சர்ச்சுக்கு தெரிஞ்சா என்ன ஆகும் தெரியுமா?"

''பாஸ்டர் நீங்க கோவப் படலாமா? கிறிஸ்துவுக்க பேரால கேக்குதேன்"

"கிறிஸ்த்து நொட்டினாரு. நான் இதுக்கு ஒரு வழி உண்டா எண்ணு பாக்குதேன."

இது ஒரு அபச்சார வார்த்தைதான். ஜெயமோகன் இப்படி எழுதியதில் நமக்குக் கோபமில்லை. இது ஒரு திருச்சபை பாஸ்டர் சொல்வது. ஆக- திருச்சபை பாஸ்டர் என்பதால் அவர் 'உண்மையுள்ள ஊழியர்' என்று அர்த்தமில்லை. இது ஏசுகிறித்துவுக்கு எதிரானது. திருச்சபைப் போதகர் ஏசுகிறித்துவுக்கு எதிராக நிற்கிறார்; ஒரு வேளை சாத்தானாக........

சொல்லப் போனால், ஏசு கிறித்துவுக்கும் சபைப் போதகருக்குமான ஒரு இடைவெளி காட்டப்படுகிறது. இந்த இடைவெளி நிரப்பப்படாமலேயே, பிரசங்கம், நற்செய்தி, தொண்டு, ஊழியம், ரசம் பரிமாறல் அனைத்தும் நடக்கின்றன. அதன் அர்த்தம் என்ன? இது காலக் கட்டங்களில் வேறுபாடு அல்லவா!

ரிங்கல் டோப், குடிசையில் வாழ்ந்து தியாகத்தால் வளர்த்த ஆதித் திருச்சபைக்கும் - இன்றைய திருச்சபைக்குமுள்ள இடைவெளி அல்லவா இது! நாடார்களின் வாழ்க்கை வசதிகள் வளர்ந்து ஆடம்பரமும் தலையெடுத்தற்குப் பின் உள்ள மாற்ற காலக்கட்டத்தில் திருச்சபையும், உலகியலுக்குத் திரும்பிவிட்டது என்பதையே இது காட்டுகிறது.

அப்புறம், இரண்டாம் பேரன் லிவிங்ஸ்டன் வருகிறான். பாஸ்டர் அவனிடம் நடந்ததைக் கூறியதும் அவன் வெகுளுகிறான். ஃபிரான்சிஸ் பாஸ்டரைத் தனியே அழைத்துப் போய் பணம் போட்ட 'கவரை' மெல்ல அவரிடம் நீட்ட, அவர் வாங்கத் தயங்குகிறார். தொகை ஆயிரம் என்ற போது வாங்கிக் கொள்கிறார்.

"கிறித்துவுக்காக; பணத்துக்காக இல்லை" - பாஸ்டர் இப்படிச் சொல்லி வாங்கிக் கொள்ளுகிறார். வாழ்க்கை முரண் காட்டப் படுகிறது. ஏசுவது ஏசுவை. ஆனால் பணம் என்றதும் வாங்கிக் கொள்வதும் ஏசுவுக்காக.

இந்த நிகழ்ச்சி, ஒரு தனி நபரின் நலிவைக் காட்டுவதல்ல; ஒரு 'திருச்சபை சமூகத்தின்' நலிவைக் காட்டுவது. ஒன்றிரண்டுதான் புறநடை. மற்றைப்படி, காலக்கட்ட மாற்றம் திருச்சபையை, பணம் பண்ணுகிற ஒரு எந்திரமாக மாற்றி விட்டதாகவே கருத முடிகிறது. ஆக, சமூகப்

பரிபாலனம், தொண்டு, உழைப்பு, நற்செய்தி அனைத்தும் சந்தேகத்துக்குரியதாகிறது.

பாஸ்டரை, முதல் நோக்கிலேயே பெருவட்டர் அளந்துவிட்டார் என்பது பின்னர் வெளிப்படுகிறது.

"எலேய், நான் பெண்ணு கெட்டுயத்துக்குப் பாய்டர கேக்கல்ல!"

அப்படியானால், திருமணம் முடித்து வைப்பதற்கு ஒரு வகை பாஸ்டர்களும், கடைசி காலத்தில் பிரார்த்தனை செய்து அனுப்பி வைப்பதற்கு ஒருவகை பாஸ்டர்களும் என்று இருவகை பாஸ்டர்கள் உருவெடுத்திருப்பதாத் தெரிகிறது. சரி, விட்டு விடுவோம்! இனி - யார் இந்தப் பெருவட்டர்? அவரின் பூர்வீகம் என்ன? அதற்கான வரலாற்றுப் பின்னணி என்ன - என்பதை அறிய வேண்டும்!

## பெருவட்டரின் வரலாற்றுப் பின்னணி!

கிறித்தவ மதம் நாடார்களை வந்தடைந்த காலம் குறிப்பாகக் கிராமப் பகுதிகளில். நாயர்களின் அட்டகாசங்கள்; நாடார்களின் கொத்தடிமை வாழ்க்கை. நாடாத்திகள் மேல் துணி கூட அணிய முடியாத நிலை. கிறித்தவத்தால் நிலைமை மாறுவதை நாயர்களால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. பல இடங்களில் கலவரங்கள்; நாடார்களை நாயர்கள் வெட்டிச் சாய்த்த வரலாறு.

அந்தக் கலவரங்களில் ஒன்றுதான் 'குடியான்' கலவரம். தப்பித்துக் கொள்ள குன்னத்துக் கல்லிலிருந்து நாடார்கள் கூண்டு வண்டிகளில் குடிபெயர்ந்தார்கள். அப்படிக் குடிபெயர்ந்த குடும்பங்களில் ஒன்றுதான் பொன்னுமணி குடும்பம். அப்போது பொன்னுமணிக்கு நான்கு வயது.

கூண்டு வண்டி வந்து நிற்கிறது. அவன் அப்பா, அம்மா, கோவணம் கட்டிய பிள்ளைகள் - கோவணம் கட்டாத பொன்னுமணி எல்லோரும் கூண்டு வண்டியிலேறிப் புறப்படுகிறார்கள்; வண்டிக்குள் தாய்க்கும் பிள்ளைக்குமுள்ள பாசம் - இவன் அவள் மடியில் தலை வைத்துப் படுத்துக்கிடக்கிறான். வண்டி ஆற்றைத் தாண்டி ஏறிக் கடக்கிறது. மாலை கவிழ்ந்து இருள்; வண்டி வயல் வெளியின் நடுவிலான பாதையில் ஏறுகிறது. சில்வண்டின் ரீங்காரம், தவளைகளின் கூட்ட ஒலிகள்.

அப்புறம் நிகழ்ச்சிகளைத் தொடர்ந்து படைப்பாளியால் சொல்ல முடியவில்லை போல் தெரிகிறது. அது, நாயர்கள் வண்டியை மறித்து வெட்டி சாய்த்த சம்பவம்; பிற்பாடு, அந்தச் சம்பவத்தைப் பேரன் ஃபிரான்சிசைக் கொண்டுத் தொடர்பு படுத்துகிறார். ஃபிரான்சிசுக்கு இந்தச் சம்பவம் பாட்டி சொல்லித் தெரியும். கடையல் எஸ்டேட்டுக்குக் காரில் போகும் போது

ஃபிரான்சிஸ் இந்தச் சம்பவத்தை நினைத்துப் பார்க்கிறான். சம்பவம் இப்படி விரிகிறது-

"தாத்தா மட்டும் எப்படியோ தப்பித்துக் கொண்டார்" என்றும் கதை கேட்டிருக்கிறான். பாட்டி நீட்டி முழக்கி கதை சொல்வாள்.

"ஒரு காலத்தில் தன்னுடைய சாதி, ஆடு மாடுகளைப் போல தொழுவங்களில் வசித்து, நுகங்களில் மாட்டப்பட்டு, அடிமை வேலை செய்து, வாழ்ந்து வந்தது என்பது அவனுக்கு ஒரு செய்தியாகத்தான் இருந்தது; அதைக் கற்பனையில் விரித்துக் கொள்ளவே இயலவில்லை. அரை வயிற்றுக் கஞ்சி குடித்து அடிமைகளாக வாழ்ந்த வர்க்கம், ஆண்மை கொண்டெழுந்து கலகத்துக்கு முயலும் என்பதும், ஆச்சரியமான விஷயம்தான். இன்று கடைத் திண்ணைகளில் அமர்ந்து வம்பு பேசி, சீட்டாடி, குலப்பெருமை கூறி, சோம்பி, காலம் கடத்தும் நாயர்கள் ஒரு காலத்தில் கீழ்ச்சாதிப் பெண்களை மானம் காக்க உடையணியக்கூட அனுமதிக்காதவர்கள்............" (பக் : 46,47)

குடியான் ரகளையில் தப்பி 'பேச்சி' குடும்பத்தோடு காட்டுக்குள் நுழைந்து அவளோடு, பிள்ளைகளோடு குடிசையில் வாழ்ந்து, தலை நிமிர்ந்ததும் அவளால் விரட்டப்பட்டு, கண்டதைத் தின்று உருவாகும் பொன்னுமணி பிற்பாடு பசிக் கொடுமையில், பேச்சி இல்லாதபோது குடிசைக்குள் நுழைந்து சிறு குழந்தைகளை அடித்து அட்டகாசம் செய்து, சின்னஞ்சிறிசு மறைத்து வைத்திருந்த சுட்ட மரச்சீனிக்கிழங்கைப் பறித்து, குழந்தையை மிதித்துக் கொல்வது மிகையான காட்சியாகப் பட்டாலும், வே. வீராசாமி கூறுவது போல, "எல்லாமே ஒரு வேண்டத்தகாத பொருளாய் மிதித்துச் சிதைக்க வேண்டிய பொருளாய் தெரிந்தது" என்பது யோசிக்க வேண்டிய செய்தியே. அப்படி மனிதக் கூட்டத்தையே வெறுத்துப் பார்க்கிறவனாகவே ஒரு கட்டத்தில் காட்டப் படுகிற பொன்னுமணி அத்துணைக்கு இரக்கமற்றவன் என்று விமரிசனம் செய்யக் கூடிய நிலையிலும் இல்லை.

அறைக்கல் குடும்பத்தின் கையில் காடு இருந்தது. பன்றிமலைக் காடு வெறும் காடுதான். ஆனால் விவசாயத்துக்கு உகந்தது போல் தோன்றியது. பொன்னுமணி அறைக்கல் அரண்மனைக்கு காணிக்கைகளோடு வருகிறான். படிப்புரைக்கு மேல் போகக்கூடாது; நிற்கிறான். சிறிய தம்புரானின் காரியஸ்தன் கொச்சுபிள்ளை படிப்புரைத் திண்ணையில் வந்து அமர்கிறான். காணிக்கைகளைப் பார்க்கிறான்.

"பொன்னுமணி தானே உன் பேர்?"

"அடியன், ஓம்................ஏமானே!"

"எந்த ஊர், உனக்கென்று சொன்னாய்?"

"அடியன் குன்னத்துக்கல் எண்ணு கேட்டுட்டுண்டு. இஞ்ச வந்து வரியம் கொற ஆவுது."

"உன் அப்பன் பெரிய ரகளைக் காரனாமே"

"அடியன் அப்படியில்ல, ஏமானே!"

"தம்புரானிடம் சொல்லியிருக்கிறேன். இப்போது குளியல் நடந்து கொண்டிருக்கிறது............இங்கேயே நில்லு, வருவார்."

மத்தியானத்துக்கு மேல்தான் தம்புரான் படிப்புரைக்கு வந்தார்.

"என்ன கொச்சுப்பிள்ளை?" என்றார் தம்புரான்.

"பண்ணிமலை விஷயமாய்"

"உம்!"

"அது இப்போது ஒன்றுக்கும் உதவாத காடுதான். ஒரு சல்லி பாட்டமோ, வாரமோ இல்லை. சும்மா போட்டிக்கிற இடத்தை இந்தப் பயலுக்குக் கொடுத்தால் பாட்டத்துக்கப் பாட்டம்; பத்து சீவன் பசியாறும்!"

தம்புரான், கூட இருந்த வைத்தியரிடம், "வைத்தியரே இப்போதே பூசிவிடலாமே; எனக்கு நேரமில்லை தெரியுமே!" என்று கூற வைத்தியர் அக்குளியிலிருந்த பெட்டியைத் திறந்து குழப்பை எடுத்துத் தம்புரானின் தலையில அமுக்கித் தேய்க்கிறார்.

கொச்சுப்பிள்ளை விடுவதாயில்லை.

"அடியன், தம்புரான் ஒன்றும் சொல்லவில்லை!"

"என்னது?"

"இந்தப் பயலின் விஷயம்!"

"என்ன விஷயம்?"

"பன்றி மலைக் காட்டை இவனுக்கு.........."

"கொடு............கொடு..............."

அவ்வளவுதான், அப்புறம் வைத்தியனோடு பேச்சு.

பொன்னுமணி அங்கேயே நின்று கொண்டிருக்கிறான். தம்புரான் திடீரென்று கோபமாகி, கொச்சுப் பிள்ளையைப் பார்த்து-

"இன்னும் என்ன? அதுதான் சொல்லி விட்டேனே!" என்று சீறுகிறார்.

கொச்சுப்பிள்ளை பொன்னுமணியிடம் திரும்பி இப்படி கூறுகிறார்-

"கேட்டாயா! பன்றிமலைக் காட்டைத் தம்புரான் உனக்குத் தானமாகத் தந்திருக்கிறார். பாட்டமும், வாரமும் ஒழுங்காய்த் தந்து விட வேண்டும்; நன்றாய் உழைத்துச் சவுக்கியமாய் இரு"

பன்றிமலைக் காடு இப்படித்தான் பொன்னுமணிக்குக் கிடைத்தது. பொன்னுமணியின் உழைப்பை நாவல் விளக்கமாகச் சொல்லுகிறது. ஐம்பது ஆட்களுடன், பணி ஆயுதங்களுடன் பொன்னுமணி, கொரட்டி மலைக்கு வந்து சேர்கிறான். நாவல் மலையை இப்படி வர்ணிக்கிறது.

"சிவப்பு கலந்த தவிட்டு நிறப் பூக்குலைகள் ஏந்திய, தழைத்த புற்கள், மார்பளவு உயரத்தில் அடர்ந்திருந்தன. தூரத்தில் ஒரளவு மரங்களாகத் தெரிந்து, விலக, விலக அடர்ந்து பரிய சுவராக எழுந்து, திசையை மறைத்த அடர்ந்த காடுகள் - அதற்கு அப்பால், அடிவானில் தெரிந்த பச்சை நிறக் குன்றுகள். வானத்திரையில் இளநீல மையால் எழுதப்பட்டவை போன்ற மலைத் தொடர்கள், - வானிலும் பூமியிலும் காற்றிலும் எல்லாம் ஈரம்; இதமான குளிராக உடலைத் தழுவும் ஈரம்......... தொலைவில் பன்றிமலையின் உச்சியில் பச்சைக் கம்பிளிக் குவியல் மீது குறுகி அமர்ந்த யானை போல மக்ருணிப் பாறை:"

"பலவித ஒலிகளின் கலவையாகப் பறவைக் குரல்கள். புற்பரப்பில் நூற்றுக்கணக்கான சாம்பல்நிற அலகும், தவிட்டுநிற உடலும் கொண்ட சிறு பறவைகள்; அவை மயங்கியபடி பறந்தும் சர்ர் என்று புதரில் ஊடுருவியும், இன்னொரு இடத்தில் அம்பு போல் வெளிப்பட்டும், காற்றில் சுழலும் சருகு போல் மிதந்தும், ஈரம் மின்னித் தெறித்த இறகு குடைந்தும் அப்பகுதி முழுக்க நிறைந்திருந்தன." (பக்-127, 28.)

இந்த வருணனை, பின்னால் வரும் ஒரு சோகத்தை முன்னுணர்த்துவது போல் தெரிகிறது. எல்லாம் அழியப் போகின்றன. மனிதன் வீறு கொண்டு எழுந்து விட்டான். இயற்கை பொசுங்கப் போகிறது. இயற்கையை எதிர்த்து ஒரு அநீதியான போர் தொடங்கப் போகிறது. இந்தப் போரில் மனிதன் வெற்றியடையலாம். ஆனால் அந்த வெற்றி, சுற்றுச் சூழலுக்கு நிச்சயம் உகந்ததல்ல. அணுகுண்டு வீச்சுப் போல அது பல விளைவுகளை ஏற்படுத்தக் கூடும். ஆனால் என்ன? மனிதனின் ஒருதலையான முன்னேற்றத்துக்கு அது தேவையாகிறது.

அது ஒருத்தனின் வருங்காலத்தை நிர்ணயிக்கப் போகிறது. பச்சைப் பசேல் என்ற மலை வெளியும், அடர்ந்து நிற்கிற மரங்களும் சாவுக்கான ஒரு சூழ்நிலையை எதிர்க்கப் போவதில்லை. அநீதியான இந்த நிகழ்வுக்கு அவை எதிர்ப்பைக் காட்டப் போவதில்லை. பறவைகளும், விலங்குகளும்,

பறந்து சிதறவோ, ஓடவோ, அல்லது கருகிச் சாகவோ போகின்றன. ஆனாலும், அவற்றின் சாவில் ஒரு தனி மனிதனின் வாழ்வு உயரப் போகிறது. அது நீதி போலவும், காலத்தின் அவசியம் போலவும் தெரிகிறது. சிந்திக்கிற போது விடை கிடைக்காத ஒரு விடுகதை போலவே இந்த நிகழ்வு அமையும். ஆனால் இதன் பாதிப்புப் பின்னர் தெரியக் கூடும்.

பொன்னுமணி கால்களை விரித்து, கைகளை இடையில் ஊன்றி நிற்கிறான். உத்வேகம் ஒன்று அவனின் மனதுக்குள் பொங்கி நிற்கிறது. பூமியின் அழகையும், தட்ப வெட்ப நிலையையும் அது நிராகரிக்கிறது. அவன் பூதாகரமான வடிவம் பெற்று விட்டவனைப் போல நிற்கிறான். மரங்களின் மேல் ஏறுமாடம் கட்டப்படுகிறது. இரவு ஏறுமாடங்களில் படுத்து தூங்குகிறார்கள்.

விவசாயத்துக்கான இடம் தேர்வு செய்யப்படுகிறது. நான்கு குன்றுகளுக்கு நடுவிலான பரந்த புல்வெளி. வேலை தொடங்கியது. சருகுகளைப் பொறுக்கிப் புல்வெளியில் குவித்துக் கொண்டிருந்தனர். இரு வாரங்கள் இப்படி..... அப்புறம் வெடிமருந்து தூவப்பட்டது. நெருப்புக் கனல் வீசப்பட்டது. எல்லோரும் ஒதுங்கிக் கொண்டார்கள்.

"குபு குபு" வென்று புகை எழ, நெருப்புப் பரவியது. முதலில் சுவாலைகளே தென்படவில்லை. சடசடவென்று பசும்புல்களுக்கும் ஒலி. மெல்ல மெல்ல புகை நிறைந்தது. ஒளி அதிகரித்தது. சுடர்கள் அசைவதும், நிறமற்ற புகை, வானோக்கிப் பரவி எழ, நெருப்பு வெகு வேகமாகப் பரவுவதும், தெரிந்தது. வெப்பம் வெகு தூரத்துக்குத் தகித்தது.............

"தேனீக்கள் கலைந்து மழை, போல ஒலி எழுப்பின. பறவைகள் பறந்து அகன்றன. மர இலைகளிலிருந்து பிடிப்பு விட்டு, புழுக்கள் உதிர்ந்தன....."வெகு தூரத்துக்கு அப்பால் புல்லின் மேலே, புகை எழுந்தது. அது வரை தெரிந்திராத பறவைகள் உள்ளிருந்து கபீரிட்டு வானில் எழுந்தன....... சில பறவைகள் மட்டுமே பறந்து போவதில் ஆர்வம் காட்டின. பெரும்பான்மை, இன்னது செய்வதென்று அறியாது தவித்தபடி வானில் தங்கி நின்றன. பிரியமானவர்களைத் தரையில் விட்டு விட்டவை போல சிறகடித்தபடி நிலம் நோக்கி வரவே முயன்றன. எளிய பறவைகள் பல அப்படியே பொசுங்கி விழுந்தன.......

"இரவு தாழ்ந்து வந்தது. காடுகள் இருள் கப்பி நிழலாக மாறின. வானில் ஒளி மிச்சமிருந்தது. தொலைவில் தெரிந்த குன்றுகளை நோக்கி ஒளி செல்வது தெரிந்தது." (பக்: 130,31)

தே. வீராசாமி இப்படி எழுதுகிறார். "இயற்கையைச் சுட்டு எரித்துத் தன் எதிர்கால வாழ்க்கைக்குரிய வளமான பிறப்புக்கு வழி செய்தார் - பொன்னுமணி"

இன்று பொன்னுமணி பெருவட்டர்; பெரிய பணக்காரர். பல எஸ்டேட்டுகளுக்குச் சொந்தக்காரர். கலக்டரையும் பிஷப்பையும் கூப்பிட்டு விருந்து வைக்கக்கூடிய பிரிட்டிஷ் கட்டடக் கலையிலான அரண்மனை வீட்டுக்குச் சொந்தக்காரர். ஆனால் வயது அவரை வீழ்த்திவிட்டது.

அவருக்கு வாழ்வளித்த அறைக்கல் குடும்பம் இன்று இருந்த இடம் தெரியாமல் போய்விட்டது. எட்டுக்கல் வீடு இடிக்கப்பட்டு பெருவட்டரின் ரப்பர் தோட்டமாகி விட்டது.

### முதலாம் மாற்றுக் காலகட்டம்

நாயர்களின் கொடி பறக்கிறது. எஸ்டேட்டுகளில் அவர்கள் வீடுகள் செல்வச் செழிப்புக்கு எடுத்துக்காட்டாய் மர்ம அறைகளுடன் பெரும் நிலப்பரப்பை உள்வாங்கி நிற்கின்றன. கீழ்ச்சாதியில் யாரும் முற்றத்தில் கூட ஏறமுடியாது. படிப்புரையோடு நின்றுவிட வேண்டும். வீடுகளில் மாடுகள் அல்ல, யானைகளே வளர்க்கப்பட்டன. யானைகளுக்குச் சோறாக்கும் 'புரை'கள் தனியாக இருந்தன. தம்புரான்களும் தம்புராட்டிகளும் உடை அலங்காரங்களில் கூட, மற்றையவர்களில் வேறுபட்டவர்கள்.

நாடார்கள் கொத்தடிமைகள்; உழைப்பாளிகள்; கம்பீரமான கறுத்த உடல்கள்; நாகரிகம் கிறித்தவ மதம் இட்ட பிச்சை. நாயர்களை, 'ஏமானே' என்று அழைக்கும் பவித்திரம்; தாழ்வு மனப்பான்மை. இத்தகையத் தாழ்வு மனப்பான்மைகளை ஓரளவு கிறித்தவ மதம் மாற்றியது; கல்வி அதற்கு உத்தரவாதமளித்தது.

மலைப் பகுதிகளுக்கு, ஓரளவு அகதிகளாய் வந்து குடியேறிய நாடார்கள் - குடிசைகளில் காலங்கழித்துக் கண்டதை உண்டு வாழ்ந்த காலம் - சமூக அநீதியை குருதியால் எழுதிய வரலாற்றுக் காலம்.

ஆனால், நாயர்களின் வாழ்க்கை சரிய ஆரம்பித்த போது, நாடார்கள் அதைப் பயன்படுத்திக் கொண்டார்கள். நாயர்களின் வீழ்ச்சிக்குக் காரணம் தேடுவது எளிதல்ல. அநீதிக்கு எதிராய் இயற்கை தந்த தண்டனையா? சொல்ல முடியாது. பாவங்களால் ஏற்பட்ட சாபங்களா? விவரிக்க முடியாது.

'ரப்பர்' நாவல் சில காரணங்களைத் தேடுவது உண்மை. நாயர்களின் எட்டுக்கட்டு வீடுகளில் அந்த சாபங்கள் நிற்பதாக ஒரு நம்பிக்கை. ஆனால்..... செல்வம் குவிந்த இடங்களில் வாழ்க்கை நியதிகள் தவறுவது தவிர்க்க முடியாதது. ஒழுக்க நிலைகள் கெடுவது கட்டாயம் நிகழ்ந்தே தீரும். பலபல இடங்களில் வைப்பாட்டிகளும், அதனால் பண விரயங்களும், தொடர்ந்த 'போக' நாட்டங்களும், குடிவெறிகளும், வழக்குகளும், வக்கீல்களும் சொத்துக்களை அழிக்கப் போதுமானவை. அழிவு வராது என்று எண்ணுகிற போதே, அணைக்கட்டுகளின் வெடிப்புகளில் நீர் கசிந்து,

அணையையே சரித்து விடுவது போல, படிப்படியாக, கண்ணுக்குத் தெரியாத மாய மந்திரமாக அழிவு பதுங்கிப் பதுங்கி வந்து விடுகிறது. இனிப் பிடித்து நிறுத்திவிடலாம் என்கிற போது வெள்ளம் தலைக்கு மேல் போய் விடுகிறது.

தனிநபரின் அழிவாக அல்லாமல் ஒரு சமூகத்தின் அழிவே இது. ஒட்டு மொத்தமான ஒரு சமூகம் உயர் நிலையிலிருந்து சரிந்து குடிபெயர்ந்து விடுகிறது; அல்லது கடைத் திண்ணைகளில் குந்தியும், சீட்டாடியும், கலுங்குகளில் உட்கார்ந்தும் நேரத்தைப் போக்குகிறது; சில நேரங்களில் பழங்கதைகளைப் பேசுகிறது.

இந்த நாயர் சமுதாயம் சாதாரண சமுதாயமல்ல. அது ஒரு காலத்தில் ராஜ வம்சமாகக் கருதப்பட்டது. கீழ்ச்சாதிகள் கொத்தடிமைகளே என்று சாதித்தது. உயர்சாதி ஆளுமைக்காக மதத்தை நம்பியது. அந்த மதம் வைணவமாக மட்டுமல்ல வைராக்கியம் கொண்டதாகவுமிருந்தது. அந்தக் கோயில்களின் கதவுகள் கீழ்ச்சாதிக்கு ஒருபோதும் திறந்து கொண்டதில்லை.

கிறித்தவம் இந்த மண்ணுக்கு அறிமுகமாகி, கிறித்தவம் கீழ்ச்சாதிகளை வளைத்துக் கொண்ட போதுகூட, இந்த மதம் சாதி வேறுபாடுகளைப் பின் வலித்துக் கொண்டு, கோயில் கதவுகளை, அவர்களுக்குத் திறந்து விடாமல், மதம் மாறியவர்களை வெட்டிச் சாய்க்க நின்றது. சாதி மேலாண்மையும், மத மேலாண்மையும்தான் அதன் இலக்கணம். மதம் கற்றுக் கொடுத்த நில உடைமையும், முதலாளித்துவமுமே அதன் பாதுகாப்புகள்.

இந்த நில உடைமைச் சமுதாயம் ஒவ்வொரு காலகட்டத்திலும் விழுந்து - நிலவுடைமை கைமாறியிருக்கிறது. இதுதான் வரலாறு. இந்த வரலாற்றிலிருந்து நாயர் சமுதாயமும் தப்ப முடியவில்லை. இந்தச் சமுதாயத்தின் வீழ்ச்சியை ரப்பர் நாவல் - சத்தியம் தவறாமல் கூறுகிறது. ஆக, ஒரு சகாப்தம் முடிந்து மற்றொரு சகாப்தம் தொடங்குகிறது. ஒரு காலகட்டம் மாறி, மாற்றுக் காலக்கட்டம் உருவாகிறது.

கொத்தடிமைகள் படிப்படியாக உயர்ந்து, உழைப்பை மட்டுமே நம்பி, கொஞ்சம் கொஞ்சமாய்ச் சேமித்து வைத்திருந்த பணத்தால், வீழ்ந்து கொண்டிருக்கும் ஒரு சமுதாயத்தை விலைக்கு வாங்கியோ, அல்லது பட்டா போட்டு வாங்கியோ, முன்னேறித் தங்கள் கொடிகளைப் பறக்க விடுகிறார்கள்.

மாற்றுக் காலகட்டத்தில் இப்படிப் பணக்காரர்களாகிவிட்ட நாடார்கள் ஒரு சிலர் அல்ல பலர், ஒரே மாதிரியான வீடுகள். அத்துணையும் பிரிட்டிஷ் கலாச்சார மாதிரிகள். இங்கே கிறித்தவ மதத்தின் தாக்கம் கவனிக்கப் பட வேண்டிய ஒன்று. இந்தப் பெருவட்டர்கள் நாடார் கிறித்தவர்கள்.

ஒடுக்கப்பட்டுக் கிடந்த நாடார்களை, 'நீங்களும் மனிதர்களே' என்ற ஆதாரக்கல்வியை வழங்கியது ஆரம்பகால - ஓடு போட்ட கிறித்தவக் கோயில்கள்தாம். இவற்றின் ஆராதனைகள் - 'விதி' கோட்பாட்டுக்கு எதிரே ஒரு இயக்கமாகச் செயல்பட்டது. ஒரு புதிய உத்வேக சக்தியாய் இயங்கியது. அடிமை மன நிலையையும், பழங்குடி மனநிலைகளையும் மாற்றி - மிருக நிலையிலிருந்து புதிய மனித நிலைக்கு உயர்த்தியது. உடல் சுத்தத்துக்காகச் 'சோப்பு'ம் மனச் சுத்தத்துக்காக ஆன்மீகமும் வழங்கப்பட்டன. நடை, உடை, பாவனைகளை மாற்றி நிமிர்ந்து நிற்கக் கூடிய மனவலிமையைத் தந்தது. இது நிச்சயம் ஒரு கலாச்சார மாற்றமே.

ஒடுக்கப்பட்ட மக்களுக்காய், இசுரவேலரின் அடிமைத்தனங்களும், எழுச்சி நிலைகளும், பிரசங்கங்களாகவும், கதைகளாகவும் விவரிக்கப்பட்டன. யூத நாட்டில் எப்படி ஒரு சமுதாயம் பரமபிதாவால் எழுந்து நின்றது என்பது, ஏதோ ஒரு பிரசங்கமாய் மட்டுமல்லாமல், மன இயல் அடிப்படையில் மகத்தான மாற்றங்களை உருவாக்கியது.

சிறிய கோயில்களை அடுத்து எழுப்பப்பட்ட தொடக்கப் பள்ளிகள் ஒருவிதமான விடுதலை உணர்வை ஏற்படுத்தின. உயர் சாதிகளுக்கு மட்டுமே சொந்தமாயிருந்த குருகுலக் கல்வி நிலை உடைத்தெறியப்பட்டு - கீழ்ச்சாதிகளுக்கும் கல்வி புகட்ட பட்டபோது, சமத்துவ கருத்தாக்கங்கள் சமூக அடிமட்டங்களை உலுக்கின.

இத்தகைய, இடைவிடாத பயிற்சிகள் மூலம் வாழ்வின் மேல் புதிய நம்பிக்கை படர்ந்தது. எனவேதான் வாய்ப்புக் கிடைத்தபோது - அதை பயன்படுத்திக் கொள்ள இவர்களால் முடிந்தது. இதற்கெல்லாம் காரணம், இவர்களை மனிதர்களாகக்கிய மதம் என்று கூறுவதில் தவறில்லை. இனி யாரும் கோபப்பட்டுப பயனில்லை. ஏனெனில், எது இவர்களுக்கு மறுக்கப்பட்டதோ அது வெளிநாடுகளிலிருந்து உள்ளே நுழைந்து இவர்களுக்கு உதவியது. உயர்சாதிச் சமுதாயமே இதற்காக வருத்தப்படவேண்டும். இந்தச் சமுதாயம் தான் கிறித்தவத்துக்கு வழிவிட்டது. சாதிப் பகுப்புகளும், உயர்வு, தாழ்வுகளும் இருக்கும் வரை, விடுதலை எங்கிருந்து வந்தாலும் சகதியில் கிடக்கும் கூட்டம் அதை ஏற்கத்தான் செய்யும்.

நாடார் கிறித்தவர்களின் உயர்வுக்குக் கிறித்தவம் ஆற்றிய பணியை 'ரப்பர்' மறுக்கவில்லை. ஒருவேளை, சிறிதேனும் சுாழ்ப்புக்காட்டி இந்த நாவல் செய்யப்பட்டதோ என்ற எண்ணம் எழுவதற்கும் வாய்ப்புத் தராமலேயே படைப்பாளி கவனமாக நிற்கிறார் எனலாம்.

சின்ன பெருவட்டரின் இளைய மகன் லிவிங்ஸ்டன் சென்னையில் பொறியியல் இரண்டாமாண்டு படிக்கிறவன். ஆனால், பெரும்பாலும்

வீட்டில்தான் கிடக்கிறான். குடும்பத்தைப் பற்றி நாவலில் அவனே அறிமுகப்படுத்துகிறான். இது டாக்டர் ராமிடம் கூறுவது- "நாங்க அஞ்சாளு; மூத்த மூணு அக்காமாருக்கும் கலியாணம் களிஞ்சாச்சி; ஒருத்தி லண்டன்ல இருக்கா, ரண்டாமத்தவா டெல்லியில, மூணாமத்தவ ஃபிலாய்ல எஞ்சினியரா இருக்கா".

இவையெல்லாம், நாடார் சாதிக்கு, மிஷனரிக் கல்வி கிடைத்ததால் ஏற்பட்டவை. இவர்கள், இந்தியா பூராவாகப் பதவிகளில் இருக்கிறார்கள். வெளிநாடுகளிலும் இருக்கிறார்கள். எதிர்ச்சபைப் பள்ளிக் கூடங்கள் தவிர கத்தோலிக்க 'கான்வண்டு'களின் வளர்ச்சி கீழ்ச்சாதி மக்களின் உயர்வுக்குக் காரணமாகியது.

எப்படி அறைக்கல் குடும்பத்தின் வீழ்ச்சிக்கு வேலப்பன் நாயரின் பிறப்பு காரணமாயிருந்ததோ, அதே போல - ஒருவேளை பொன்னுமணி பெருவட்டரின் குடும்ப வீழ்ச்சிக்கு ஃபிரான்சிஸ் காரணமாகலாம். ஆனாலும், வீழ்ச்சி அவ்வளவு எளிதல்ல. பொன்னுமணி பெருவட்டர் படுத்துக் கொண்டதற்குப் பின்னர், செல்லையா பெருவட்டர் வருங்காலம் பற்றிய சந்தேகங்களை உள்ளுக்குள் வளர்த்துக் கொண்டவராகக் காட்டப்படுகிறார். எதற்கும் நடுங்குகிறார். வீழ்ச்சி ஏற்பட்டுவிடுமோ என்ற அச்சம் அவரைப் பேய் போல பிடித்து அலைக்கழிக்கிறது. உண்மையில் வீழ்ச்சிதானா என்று அறிய முடியவில்லை. தொலைபேசியைக் கறக்கி உண்மை நிலையை அறிந்து கொள்ள முயன்றும் சரியான செய்தி கிடைக்கவில்லை. விழப்போகிற கேரள அரசைப் பிடித்து நிறுத்த வேண்டும். கம்யூனிஸ்ட் ஆட்சி வந்து விட்டால், 'ரப்பர்' மார்க்கட் சரிந்துவிடும் அயல்நாட்டு ஒப்பந்தம் பெரிய இழப்பை ஏற்படுத்திவிடும்.

யோசித்துப் பார்க்கிற போது அறைக்கல் குடும்பத்து பாஸ்கர நாயரின் நினைவு வருகிறது. அவரால் முடியும். கேரள அரசியலில் முக்கிய புள்ளி. அறைக்கல் குடும்பச் சொத்தைப் பங்கு வைப்பதில் நடுவராக இருந்து பெரும் பணத்தைச் சுருட்டி, திருவனந்தபுரத்தில் வசதியுடன் இருக்கிறார்; எம்.எல்.ஏக்களுக்குப் பணம கொடுத்தால் ஆட்சி விழாது. கொடுப்பது நல்லது.......

செல்லையா பெருவட்டர் செய்தது பெரிய தவறுதான். பெருந்தொகை பாஸ்கர நாயரிடம் சிக்கிக் கொள்ளுகிறது. அப்புறம், சின்ன பெருவட்டத்தியின் படைப்பு, கதைக்கு பல வகையில் வெளிச்சம் தருகிறது. இவள் செல்லையா பெருவட்டரின் மனைவி; பெயர் திரேசி. கான்வெண்டில் படித்தவள்; கவர்ச்சியில் பெயர் வாங்கியவள். கலியாணத்துக்கு முன்பே எபன் என்ற பையனோடு காதல்; சாதாரண காதலா? டாக்டரின் மகளாக அறிமுகமாகும் இவள் - தாய்த்தமிழகப் போராட்டத்தில் ஈடுபாடு கொண்ட

எபனை விட்டுவிட்டு, செல்லையா பெருவட்டரை கைபிடித்த போதே அழிவு தொடங்கி விட்டது போல் தெரிகிறது.

செல்வம், படிப்பு, புதிய நாகரிகம் அனைத்தும் ஒரு பகுதி நாடார்களை மேல்நிலையாக்கத்துக்குக் கொண்டு வந்து விட்ட நிலையில், தங்களுக்குள்ளாகவே இவர்கள் உயர்சாதியாகிவிட்டார்கள். புதிய இசுரவேலர்களாகத் தங்களை விளம்பரப் படுத்திக் கொண்டனர். பின்னே பங்களாக்களும், எஸ்டேட்டுகளும், கார்களும் அடிப்படை ஒழுக்க நெறிகளுக்குச் சவால் விடாதா என்ன? ஆடம்பர வாழ்வும், அளவு மீறிய செலவும், குடியும் கூத்தும் ஆண் என்றிலை பெண்ணையும் அடிமைப் படுத்திக் கொள்ளுகிறது. சின்ன பெருவட்டத்தி விதிவிலக்கல்ல.

பின்னர் ஒரு கால், மகன் ஃபிரான்சிஸ் இவளை, "கூதற.......... ஒனக்குக் கள்ள புருஷன் வேணும் இல்லியாடி!" என்று திட்டுவது இவளின் குணாதிசயங்களைக் கூறப்போதுமானது. இவள் பெருவட்டரின் குடும்ப அழிவுக்காக வந்து சேர்ந்தவள். முற்றிலும் மேல் நிலையாக்கச் சமுதாயத்தின் ஒழுக்கக்கேட்டின் குறியீடு. இவளும், இவளின் இளைய மகன் லிவிங்ஸ்டனும் ஒரு கட்சியாய் நிற்பதில் வியப்பொன்றுமில்லை. ஏனெனில் இவனும் ஒழுக்கக் கேட்டுக்கு இவளைப் போலவே உதாரணமானவன்.

அறைக்கல் வீட்டு, அழிந்த பரம்பரையில் கடைசி 'மனுஷி' யாக நிற்கிற நாயர் பெண்ணான தங்கத்தை - வேலைக்காரி என்ற முறையில் பாதுகாக்க வேண்டிய இவன் தடவி தடவியே அவளின் கன்னிமையைப் பறித்தவன், அவள் அறைக்கல் குளத்தில் விழுந்து சாகக் காரணமானவன். யாதொன்றையும் பற்றி இவன் கவலைப்பட்டதாகத் தெரியவில்லை. இது மேல்நிலையாக்கக் குணாதிசயமே.

செல்லையா பெருவட்டர் பேணு எஸ்டேட்டை விற்க முயலும் போது, தாயும் மகனும் சேர்ந்து கொள்ளுகிறார்கள். இதிலிருந்து வாழ்க்கைப் பாதுகாப்பைத் தேடிக்கொள்ள 'கோர்ட்' மூலம் நடவடிக்கை எடுக்கவும் இவள் தயங்கியதில்லை - என்று தெரிகிறது. இயற்கைக் காடுகளை அழித்து உருவான ரப்பர் செயற்கையாய் உயர்ந்த ஒரு சமுதாயத்தை அழிக்கவும் காரணமாக நிற்கிறது.

வீட்டில் அதிகம் தனித்திருக்காத இவள் பின்னிரவில் வீட்டுக்குள் நுழைந்ததும், ஃபிரான்சிஸ் இவளை நோக்கி-

"ஏடி, ஒனக்க கிட்ட ஒரு காரியம் சொல்லணும்" என்கிறான்.

"என்னது?"

"மேலே போவம்!"

"எதுக்கு?"

"வாறது ஒனக்குக் கொள்ளாம்"

ஃபிரான்சிஸ் படியேற பெருவட்டத்தி மேலே வந்தாள்.

"உள்ளே வா, கேக்கட்டு!"

அவள் சேலையை நுனி இழுத்துப் போர்த்தினாள்.

"வக்கீலத் தேடிப் போனியாமே?"

அவள் எச்சில் விழுங்கினாள்.

"சொல்லுடி, என்னவாக்கும் ஒனக்க பிளான்?"

லிவி கட்சிக்காரிக்காகத் தலையிடுவதை ஃபிரான்சிஸ் வெட்டி விடுகிறான். சிறு அடிதடி; அப்புறம் ஃபிரான்சிஸ் கதவைச் சாத்துகிறான்.

"கூத்தற..............."

"கதவ தெறபில!"

பிரான்சிசுக்கு வெறி மடை திறந்தது. அவன் முரட்டுக் கரம் எழுந்து தாழ்ந்தது. சுவரோடு அவளைத் தள்ளினான்.

யார் யாரோ கதவைத் தட்டும் ஒலி.

"இனிமேல் இந்த வீட்டுப்படி தாண்டினா, கள்ள மோளே, ஒனக்க சவம் தான் ..............."

கதவைத் திறக்கிறான் பிரான்சிஸ். வேலைக்காரன் குஞ்சி முத்து அவனருகே வந்து -

"சின்ன பெருவட்டர ஆஸ்பத்திரிக்கு எடுத்திருக்கு"

என்கிறான்.

எதற்கும் பிரான்சிஸ் கவலைப்படவில்லை. குற்ற உணர்வு ஏதும் இல்லை. சரிந்து தூங்க ஆரம்பிக்கின்றான்.

ஆக, சின்ன பெருவட்டத்தியின் விழ்ச்சியல்ல இது. இது குடும்ப மானத்தின் வீழ்ச்சி. ஆனால் ஒரு காலகட்ட நாடார்களின் 'தலை சீவல்' ஒன்றுமில்லை. இதுதான் மேல்நிலையாக்கம் தந்த ஒரு மாற்றம். அரிவாள் மாறிவிட்டது; பைபில் அந்தக் கைக்கு வந்துவிட்டது.

செல்லையா பெருவட்டரின் வீழ்ச்சி சாதாரண வீழ்ச்சியல்ல: சொத்து முழுவதும் அழியாதபோதும் - மனைவியால் தலை தொங்கி நிற்கிற அழிவு: இந்த இழிநிலை அழிவு இனிவரும் அழிவுக்கு ஒரு தொடக்கமாக நிற்கிறது.

சின்ன பெருவட்டர் செல்லையாவுக்கும் திருவனந்தபுரம் பாஸ்கர நாயருக்கும் நடக்கும் உரையாடல் இதற்கு முன்பே நிகழ்ந்துவிட்டது.

"இன்ன ஒரு வாரம் இருக்குமா இந்த சர்க்கார்"

"ஒரு வாரம் ஆகாது" இது பாஸ்கர நாயரின் பதில்,

அப்படியானால், ஆட்சியைத் தூக்கி நிறுத்த கொடுத்த பணம்..............

"அது செரி, ஏ.பி. (பாஸ்கர நாயர்)க்கு என்ன கிட்டும்?"

"இரிகேஷன் அண்ட் ஃபாரஸ்ட்"

"அதில கொறஞ்சி ஒண்ணுக்கும் ஏ.பி. சம்மதிக்கமாட்டிய"

"பெருவட்டரே இப்ப ஒண்ணும் குடி மூழ்கிப் போய்விடவில்லை"

"நீரு மயித்தினது ஒக்க மதி. நான் குடுத்த பைசாவைத் திருப்பிக் குடுத்து போடும்"

"அது நாம் அட்ஜஸ்ட் செய்யலாம்"

சண்டை வலுக்கிறது. வாங்கிய பணத்தைத் திருப்பிக் கொடுக்க பாஸ்கர நாயர் தயாரில்லை.

"கள்ள நாயே, ஒன்ன சும்மா விட்டுப் போடுவேன் எண்ணு நெனைச்சியா? நாயே எனக்கும் ஆளு உண்டு"

"சரி. அப்படியானால் அவர்களிடமே போய்ச் சொல்லும்"

"ஒனக்கெ சீவன் எனக்க கையிலதான் பாத்துக்க. நான் பொன்னு பெருவட்டனுக்கு மகன் எங்கி........"

பின்னர் பாஸ்கரன் நாயர் துருப்புச் சீட்டைத் தூக்கி வெட்டுகிறார்.

"ஒரு விஷயம், லிவி ஏதோ பொண்ணை கொன்றுவிட்டதாய்ப் பேச்சு அடிபடுகிறதே. பெருவட்டர் இடைப்பட்டு அது தற்கொலையாக மாற்றி விட்டீர்களாம்... நான் நம்பவில்லை. கம்யூனிஸ்ட் காரப் பயல்கள் இங்க வந்து கத்தினார்கள்........"

செல்லையா பெருவட்டர் முற்றத்தில் இறங்கிக் காரை நோக்கித் துரத்தப் பட்டவர் போல ஓடினார்.

இப்போதும் காடு தீப்பற்றிக் கொள்ளுகிறது. அது பெருவட்டர் வைத்த நெருப்பல்ல. நாயர் வைத்தது. இனி இன்னொரு விதமான ரப்பர் உருவாகலாம் - அதுவும் கூட யாருக்காகவோ, தார்ச்சாலைகளை உரசி உயிர்விடக் கூடியதாகவே இருக்கும்.

**ஃபிரான்சிஸ்**

பிரான்சிஸ் பொறுப்பற்றவனாகக் காட்டப்பட்டு, பின்னர் மாறியவனாகக் காட்டப்படுகிறான் - முரட்டுத்தனம் நாடார்களுக்கே உரியது.

எஸ்டேட்டில் சுகேசினியிடம் இவன் போகிறான். வேசியாகக் காட்டப்படுகிற இவள் அறைக்கல் குடும்பத்துச் சீரழிந்த வேலப்பன் நாயரை தரகனாக வைத்திருப்பது போல் தெரிகிறது.

பிரான்சிசைப் பொறுத்தவரை, அவள் இவனுக்கு மட்டுமே உள்ளவளாக இருக்க வேண்டும் என்ற எதிர்பார்ப்பு; ஆனால் அவளால் அப்படி இருக்க முடியவில்லை. அவளை அடிக்கிறான்; பின்னர் அழுத்தமாக அவளை அணைக்கிறான்.

படிப்பு வேண்டாம் என்றும் விவசாயம் போதுமென்றும் பெரிய பெருவட்டரிடம் கூறித் தப்பித்துக் கொண்டவன் இவன். ஆனால் தாத்தாவிடம் இவன் வைத்திருக்கிற அன்பு அலாதியானது. தாத்தாவும் இவனை மட்டுமே நம்புகிறார்.

குடும்ப அழிவுக்கு இவன் ஒரு காரணம் என்பது ஒருதலை பட்சமான தீர்ப்பாக இருக்கக்கூடும். ஒரு சமுதாயம் தன் அழிவை தானே எழுதிக் கொள்ளுகிறது. மேல்நிலையாக்கத்துள், கீழ்நிலையாக்கக் குணாதிசயத்தில் இவன் நிற்கிறான்.

"சில சமயம் இரவில் கண்விழிக்கும் போது அதிசயமாய்ப் போதை தெளிந்து, மிகத் துல்லியமான ஒரு மனநிலை ஏற்படும். முன்னும் பின்னும் மனம் பெண்டுலம் போல அசையும்.. அந்தக் கணம் வரை, செய்து வந்ததை முழுக்க எப்பேற்பட்ட அற்பத்தனங்கள் என்று மனம் திடுக்கிடும்.. அந்த அற்பத்தனங்களுக்காய் உள்ளூர தன் மனம் வெட்கிச் சுருண்டு கொள்வது தெளிவாய்த் தெரியும்......... நாளை விடிந்த நிமிடம் முதல், புதிய வாழ்வும் புதிய முகமும் என்று எண்ணிக் கொள்வான்...... ஆனால் காலையில் எல்லாமே வெகு தூரமாய் மாறிவிட்டிருக்கும்" (பக்.45)

மனசாட்சியற்ற மேல்நிலையாக்கக் குணமல்ல இது. ஒவ்வொரு முறையும் அது தன்னைப் புனர் பரிசீலனை செய்து தத்தளிக்கும் கீழ்நிலை யாக்கக் குணம். உறுதியற்ற ஒரு மன நிலை. எனவே, இவன் எந்தத் தட்டில் நிற்கிறான் என்பதை உறுதி செய்வது கடினம். மனிதநேயத்தின் தட்டில் இவன் உட்கார்ந்திருப்பதாகவும் கொள்ளலாம்.

"அவனுக்குள் எப்போதும் நாயர்கள் மீது ஒரு கனிவு உண்டு. இன்றுவரை ஒரு நாயரை 'அடே' என்று கூப்பிட அவனால் முடிந்ததில்லை" (பக்.47)

லிவியால் கெடுக்கப் பட்ட தங்கத்தின் மேல் இவனுக்கு ஒருவித பட்சாதாபம் இருந்தது. தங்கம் ஒரு பெண்ணாக என்றும் அவனுக்குத் தோன்றியதில்லை. அறைக்கல் ஸ்ரீதரன் நாயரின் மகளல்லவா அவள். அப்பன் கொஞ்சம் பணமா அழித்தான். கூத்தியா வீடு, கோர்ட்டு, ஊருக்கொரு வைப்பாட்டி என்று அழித்து கடைசியில் கஞ்சிக்கு வழியில்லாமல் வாதத்தில் விழுந்து செத்தான்.

லிவி ஒரு அல்டம்; பிறரில் வீழ்ச்சியில் குதூகலப் படுகிறவன்; அதை எப்படியெல்லாமோ பயன்படுத்திக் கொள்ளுகிறவர்களில் அவனும் ஒருவன், அவளைக் காமத்துடன் அணுக அவனுக்கு எப்படி முடிந்தது. பிரான்சிசுக்குக் குமட்டிக் கொண்டு வந்தது. ஆனால் பெருவட்டரின் சாபங்களில் பாதிக்குமேல் அவன் தலையில் அழுத்தித் தேய்த்து வரையப்பட்டிருந்தன.

கொச்சுபிள்ளையிடம் பன்றிமலையைக் 'கொடு, கொடு' என்று கூறிய அதே தம்புரான் (அப்புக்குட்டன் நாயர்), கீழ்நிலைக்கு வந்து பெருவட்டரைப் பேணு எஸ்டேட்டில் சந்திக்க வந்து காலம்........

'என்னைத் தெரியலையா. நான்......"

"அறியலாம், காரியத்த சொல்லும்", இது பொன்னு பெருவட்டர்

"பாட்டமும் மிச்ச வாரமும் ஒன்றும் இப்ப தருவதில்லை"

"பாட்டமா"

கிழவர் பதில் பேசவில்லை.

"நீரு எனக்குப் பாட்டத்துக்கு என்னத்த தந்தீரு?...... வல்ல ரேகையும் உண்டுமா?"

"ஆதாரம் இல்ல என்பதற்காகக் கொடுத்தது கொடுக்கவில்லை என்று ஆகிவிடுமா?"

"ஆருவே கொடுத்தது? குடுக்கியதுக்கு நீரு ஆரு வே? காட்ட கைகாட்டி விட்டீரு: ஒமக்க காடுனி யாரு சொன்னா?......... இது எனக்க மண்ணு. ஒரு சல்லிப் பைசா ஒரு பயலுக்கும் தர ஒக்காது ......... சோலியப் பாரும் வேய்"

"பெருவட்டரே" என்று பரிதாபமாய் அப்பு 'குட்டன் அழைத்தார்; "தரவாட்டில் காரியங்கள் ரொம்ப கஷ்டந்தான் இப்ப"

"மம்மாட்டி எடுத்துக்கிட்டு சோலிக்கு போவும் வேய்"

பெருவட்டர் திரும்பி நடந்தார். பின்னால் தம்புரானின் குரல்தாவிப் பிடித்தது.

"பொன்னுமுத்து, அல்பனுக்கு வாழ்வு வந்தால் என்ன ஆகும் என்று காட்டி விட்டாய்...... பிள்ளை குட்டிகளுடன் சவுக்கியமாய் இரு. ஆனால் ஒன்று, ஏற்றமும் இறக்கமும் கண்டவன் சொல்லுகிறேன், கேட்டுக்கொள். ஏறினால் இறங்காமல் முடியாது........ கடவுள் விட மாட்டார். நான் வயிறெரிந்து சபித்தால் பலித்துவிடும்." மேல் நிலையிலிருந்து வீழ்ச்சியடைந்து விட்ட ஒரு கிழவரின் கண்ணீர்........ அது எழுத்தாய் மாறி பிரான்சிசின் தலைமேல் பரிந்து நிற்கிறதா?

தந்தையால் கண்டிக்க முடியாத தாயை அவன் கண்டித்ததோடு அடித்துத் துவைத்தான். அவன் என்றுமே யாரையும் - செல்லையா பெருவட்டர் உட்பட -லட்சியம் செய்தவன் அல்ல. அந்த சிகிட்சை மிகப்பிந்தியே தரப்பட்டது: காலம் கடந்தது.

பொன்னுமணி பெருவட்டரின் உடலில் ஒரு பாதி செத்துவிட்டது. உயிர் போவதும், வருவதுமாயிருந்தது. குஞ்சிமுத்துவிடம் பூச்சிமருந்து கேட்கும் அளவுக்கு வாழ்க்கை மேல் வெறுப்பு தட்டிவிட்டது. சில நேரம் தெளிவு: சில நேரம் இருட்டு. தெளிவில் உயிராசை, விரக்தியில் செத்துப் போக வேண்டும்... தற்கொலை கூட நல்லதாகப் பட்டது.

வீட்டுடன் ஒட்டுதலின்றியிருந்த பிரான்சிஸ், இனி அவ்வாறு இருந்தால் காரியங்கள் கெட்டுவிடும் என்று நினைக்கிறான். நல்ல திருப்பம். குஞ்சு வந்து கூறுகிறான்.

"விளிச்சுதாரு"

இவன் தாத்தாவின் கட்டிலண்டை போய், முழந்தாளிட்டான்.

அவர் அவனை அடையாளம் கண்டு கொண்டதாகத் தெரியவில்லை.

"தாத்தா" என்றான்.

"தணுக்குது", என்றார் அவர்.

பிரான்சிஸ் நிற்க முடியாமல் டீபாயில் அமர்ந்தான். பெருவட்டருக்கு விக்கல் எடுத்தது. கூட்டம் கூடியது. பாலை எடுத்து மிகக் குறைவாக வாயில் இட்டார்கள். அவரில் தெளிவு பிறந்தது.

காலையில் பெருவட்டர் இன்னும் தெளிவாக இருந்தார்.

"பிராஞ்சி" என்றார்

"தாத்தா"

"ஒக்க வித்தாச்சாவில"

அப்புறம், "கிருஷி செய்யி, கையும் காலும் இருக்கே" என்றார்.

"தாத்தா இதொக்க ஆரு சொன்னது"

"ஆரு சொன்னா என்ன?"

அப்புறம் குஞ்சி, பால் கொண்டு வருகிறான்.

"ஒனக்கு கொறெ ரப்பர் எழுதி வச்சிட்டுண்டு"

குஞ்சியின் கண்கள் கலங்கின.

"நீ பிராஞ்சிகூட நின்னுக்க"

இதுதான் பாட்டனைப் பேரன் கடைசியாக உயிரோடு பார்த்தது.

மனநிலை கெட்டுக் காரை எடுத்துக் கொண்டு கிளம்பினான். 'சாகலாம்' போல் தோன்றியது. அப்புறம், மாற்பாடி சந்திப்பைத் தாண்டியபோது தாழைப்புதர் கோட்டையின் வாசல் வழியாக ஆறு தெரிந்தது. காரை மெல்ல இறக்கிக் கலுங்கை அடைந்தான். கார் இறங்கி மறுகரைக்கு வந்தது.

சிறு பிள்ளைகளின் கூட்டம். இவன் ரேடியேட்டருக்குத் தண்ணீர் பிடிக்க ஆற்றில் இறங்கி மீண்டும் ஏறியபோது பிள்ளைகள் சுற்றிக் கொண்டனர். கள்ளமில்லாத குழந்தைகளோடு சிறிது நேரம் பேச்சு. மனம் சுத்தமானது. அப்புறம் என்ன நினைத்தானோ டாக்டர் ராமைப் பார்க்க வேண்டும் என்று தோன்றியது. ராமோடு பேசிக் கொண்டிருக்கும் போது டாக்டர் லாரன்ஸ் வருகிறான் - ஒரு நாடக உத்தி போல.

படுக்கையில் கிடக்கும் பெருவட்டரிலிருந்து தொடங்கி சுற்றுப்புறச் சூழலுக்குப் பேச்சு திரும்புகிறது. கண்டங்காணியின் மகன் கண்டங்காணியில் உள்ளடக்கத்தைப் பெற்றிருக்கிறான். யார் இந்தக் கண்டங்காணி? அது தனியே சொல்லப்பட வேண்டிய மிகப் பெரிய செய்தி.

டாக்டர் லாரன்ஸ் கூறுகிறான் - 'ரப்பர் சுற்றுப்புறச் சூழ்நிலையைக் கெடுத்து நாட்டை சீரழித்துவிட்டது'

செல்லையா பெருவட்டர் அயல் நாட்டு ஒப்பந்தத்தால் சீரழிவை எட்டிக் கொண்டிருப்பதாய் பிரான்சிஸ் கூறுகிறான். தகப்பனுக்கு அதில் அனுபவம் போதாது என்பதே பிரான்சிஸ் வெளியிடும் கருத்து. அப்புறம் கூறுகிறான்.

"சத்தியமாட்டுதான் சொல்லுதேன் - பணம் போறதப் பத்தி எனக்கு ஒரு துக்கமுமில்லை"

டாக்டர் லாரன்ஸ் கூறுகிறான்-

"ஆகாயத்துப் பறவைகள் விதைப்பதில்லை. அறுவடை செய்வதில்லை"

இது சத்திய வாக்காய் அவனைத் தாக்குகிறது.

அந்த வார்த்தைகளைப் பல முறை மனதுக்குள் திரும்பத் திரும்பக் கூறினான். சொல்லச் சொல்ல அவை மந்திரம்போல அவனுள் விரிந்தது. புதுப்புது அர்த்தங்களுடன் வளர்ந்தது.

"ஆகாயத்துப் பறவைகள்,
ஆகாயத்துப் பறவைகள்"

'நர்ஸ், எட்டிப் பார்த்தாள்,

"சார், போன்" என்றாள்.

ராம் எடுத்தான்: திரும்பி வந்தான்.

"பிரான்சிஸ் உங்க வீட்லேருந்து போன்........ எனக்கு வந்த ஃபோன் தான். நீங்க இருக்கறதா சொன்னேன்."

ஃபோனை எடுக்குமுன் ராமிடம் கேட்டான்.

"என்ன சங்கதி"

"உங்க தாத்தா........"

நெற்றி நரம்பு புடைக்க அவன் 'ரிசீவரை' எடுத்தான். சரியாகப் பிடிக்க முடியவில்லை. இரு கைகளாலும் பற்றிக் கொண்டான். ஆனால் போனில் எதுவும் கேட்கவில்லை. அவன் மூச்சொலி தவிர.

பொன்னுமணி பெருவட்டர் செத்துப் போனார்.

**கண்டங்காணி**

சொற்ப இடங்களில் மட்டுமே வருகிற கண்டங்காணி, இந்த நாவலில் மிக அழுத்தமான பாத்திரம். பொன்னுமணி காட்டைத் தோட்டமாக்கிய காலத்தில் அவருடன் இருந்தவர் - பழகியவர் கண்டங்காணி. ஆதிவாசி: இப்போது பெருவட்டர் படுத்த படுக்கையாகிவிட்டார் என்று கேள்விப்பட்டு அவரைப் பார்க்க வருகிறார்.

பேரன் வீட்டிலிருந்து இருபது வருடங்களாக வெளிவராத கண்டங்காணி கொள்ளுப் பேரன் தோள்களைப் பிடித்துக் கொண்டு நடக்கிறார். அவர் சிறு பையன்களாகப் பார்த்தவர்களின் பையன்கள் பஞ்சடைத்த தலையும், கைத்தடியும், வற்றிப்போன உடல்களுமாய்த்

திண்ணையில் அமர்ந்திருந்தார்கள். அவர் காட்டு ஆனைகளைக் கண்டு பயந்தோடிய காடுகள் இப்போது சந்தைகளாலும், சினிமா தியேட்டர்களாலும் கலகலக்கின்றன. யானை ஏறாத மலைகளில் கூட மின் விளக்கும், பேருந்தும் வந்துவிட்டது.

கொள்ளுப் பேரன்களையும், அவர்கள் குழந்தைகளையும் தொட்டு மட்டுமே அடையாளம் கண்டு வந்தார். ஆனாலும் உடலில் ஒரு கூனலோ, வளைவோ இல்லை. உடல், உலர்ந்த வாழைப்பட்டை போல் இருக்கிறது. கள முற்றத்துக்கு வந்தபோது, கையைக் கண்மேல் வைத்து நிமிர்ந்து கட்டிடத்தைப் பார்த்தார். கண்களில் கண்ணீர் பொங்கியது.

லிவி கண்டங்காணியைக் கண்டு அலட்சியமாக நிற்கிறான். செல்லையா பெருவட்டர் வந்து, 'ஆகா........ கண்டங்காணியா, வரணும்; அப்பன் கெடப்பில்தான்; எப்பளும் சொல்லுவதுண்டு" என்கிறார். கிழவன் புன்னகைத்தார்; அது அழுகை போலிருந்தது.

லிவி கண்டங்காணியைப் பாட்டனாரின் அறைக்குக் கூட்டிப் போகிறான்.

"தாத்தா, காணி வந்திருக்காவ!"

பெருவட்டர் இமை சரிய புரியாமல் கிடந்தார். லிவி மீண்டும், "தாத்தா மலையில் இருந்து கண்டங்காணி வந்திருக்காவ" என்று உரக்கக் கூறிய போது அதிர்ந்து, கண்களை திறந்து உற்றுப் பார்த்தார்.

"எங்கல!"

காணி கட்டிலின் கீழே கால்களை மடக்கி உடம்பு உதறக் குந்தி, தரையில் அமர்ந்தார்.

பெரிய பெருவட்டரின் பார்வை காணியின் மேல் நிலைத்தது. அப்புறம் குசலம் விசாரிக்கிறார்.

"இவனுக்க பேரு லாரன்ஸ். இவனுக்க பெயலுக்க பேரு.................. ஓர்ம இல்ல!"

லாரன்ஸ், "டேவிட் பென் எபநேசர்!" என்கிறான்.

"எப்பளு போணும் ஒனக்கு?" பெருவட்டர் கேட்கிறார்.

"அது இப்பம்.. ராத்திரிக்கு மின்ன பெய்யிட்டா...........!"

"செரி.........இவன இஞ்ச நிறுத்த ஒக்காது; இஞ்ச கெடந்தா ஒறங்க மாட்டான்; இல்லியாபில கண்டா?"

செல்லையா பெருவட்டரின் மனைவி - பெருவட்டத்தி உள்ளே வருகிறாள்.

"காணிக்கு வயசு கொற ஆச்சுது எண்ணு தோணுதே!"

அப்புறம், "காணிக்கு என்ன குடிக்கியதுக்கு எடுக்கட்டு!" என்கிறாள்.

"தாத்தா மோரு மட்டுந்தான் குடிப்பாவ!" என்கிறான் பேரன்.

"இம்பிடு கருப்பட்டியும் கிட்டினா கொள்ளாம்!" என்கிறார் காணி.

பெருவட்டத்தி உள்ளே போய்விட்டாள்.

"எனக்கு காலம் அடுத்து போச்சுபில கண்டா!"

பேச்சு நீள்கிறது.

"எங்களயொக்க அனுப்பிப் போட்டுத்தான் நீ வருவே!"

அப்புறம் பெருவட்டர் கண்களை மூடிக்கிடந்தார். பின்னர் ஒரு உத்வேகத்துடன்-

"ஏல கண்டா, இஞ்ச இருக்க வா, ஒன்ன தொட்டுப் பாக்கட்டு!"

தொட்டுப் பார்த்து விட்டு, மீண்டும் கண்களை மூடி, அப்புறம் கண்ணீர் விட்டு........

காணியும் கேவிக் கேவி அழுகிறார்.

இவை இரண்டும் முரண்பாத்திரங்கள். பெருவட்டர் காட்டையழித்துப் பணக்காரர் ஆனவர். காணி இயற்கையை அனுபவித்துப் பேராசைகளை விட்டவர். வே. வீராசாமி இப்படி எழுதுகிறார். "வாழ்வை வாழைக் காடாக அவர் பார்த்தாரே ஒழிய அதனை ரப்பர் தோட்டமாக மாற்ற நினைக்கவில்லை. வாழையாக மனித நாடகத்தில் நடந்து மனித மனதுக்கு அருகே நிற்கும் வாழையாகவே வாழ்ந்தார். கண்டன்காணி எல்லா மனிதர்களாலும் நேசிக்கப் பெற்ற நல்ல மனிதர். பண நாகரிகத்தின் கைபடாத ஆதிவாசியாகவே வாழ்ந்து வாழையடி வாழையாக வளர்ந்து வரும் பண்பாக இந்நாவலில் ஒளிவீசுகிறார்."

ஆலஞ்சோலைக்கு, பாட்டனும் பேரனும் வந்து சேர்ந்தபோது இருட்டத் தொடங்கியிருந்தது. கண்டங்காணியைக் குடும்பத்துப் பெண்கள், "மிகப் புனிதமானதும், மனிதனை மீறிய சில மகத்துவங்களின் பிரதிநிதியுமான, ஒரு புராதன வஸ்து என்பது போலக் கருதி வந்தார்கள்."

லாரன்சின் மனம் அனைத்தையும் உள்வாங்கி உலகியலைப் பற்றிச் சிந்திக்கத் தூண்டியது. கிறித்தவத்தைப் பற்றி ஆழமாக எண்ணிப் பார்க்கிறான். "பூர்வ நிர்வாணமாய், எளிமையின் மர்த்த ரூபமாய், அன்னைமடி மீது, அமர்ந்த மனித குமாரன்; அவன் முன், அறிவின்

கர்வமும், செல்வத்தின் செருக்கும், வணங்கி ஒடுங்கி நிற்பது போல் ஒரு எண்ணம் ஏற்பட்டது. ஐசுவரியவான் சொர்க்கத்தில் பிரவேசிப்பது என்பது, ஊசியின் காதில் ஒட்டகம் நுழைவதைவிட அரிது."

அவன் நினைத்தான், 'தாத்தா அந்த வீட்டில் தங்க நேர்ந்தால், இரண்டாம் நாள் துடிக்க ஆரம்பித்துவிடுவார்.........தாத்தா இப்பேர்ப்பட்ட ஒரு மாளிகையில் வசிக்க ஆரம்பித்தால் என்ன ஆகும்! அவர் சில வாரங்களிலேயே உயிர் துறந்து விடக்கூடும்.......'

காட்டின் வரலாற்றையும், மாற்றங்களையும் அவன் நினைத்துப் பார்க்கிறான். ஒரே மரங்களாலும், வாழைகளாலும் நிறைந்தகாடு; பின்னர் வாழைத் தோட்டமாயிற்று. வாழை இயற்கையின் கவிதை. அப்புறம் கோட்டயத்திலிருந்து 'மாப்ளாக்'கள் வந்து ரப்பர் பயிரிட்டார்கள். அப்புறம் காடே ரப்பர் ஆனது. ஒரே மாமிச வாடை; தொடர்ந்து அவன் சிந்திக்கிறான்.

"கோடிக் கணக்கான மரங்களை இம்சைப் படுத்திப் பெறும் நாகரிகம் அதன் ஆத்மாவையே பாவத்தால் மலினப்படுத்தி விட்டிருக்கிறது. அந்தப் பாவத்தில் தெரிந்தோ, தெரியாமலோ, பங்கேற்கும் ஒருவனால், எப்படித் தூய மனசுடன் கண்ணீர் விடமுடியும்? எப்படிக் கிறித்தவனாக இருக்க முடியும்? கிறித்து ஆதிவாசிகளுக்கு உரியவர் என்ற எண்ணம் அவனுள் பளீரிட்டது.........

"ஆம், கிறிஸ்து ஆதிவாசிசகளுக்கு மட்டும் உரியவர். ஒரு ஆட்டுக் குட்டியை அந்தரங்க எழுச்சியுடன் மார்போடு தழுவிக் கொள்ள வேறு யாரால் முடியும்? வானத்துப் பறவைகள் விதைப்பதில்லை, அறுவடை செய்வதில்லை;, என்பதன் சாரம் ஆதிவாசியைத் தவிர வேறு யாருக்குப் புரியும்? "உனக்குச் செய்யப்பட வேண்டும் என எதிர்பார்ப்பதை, நீ மற்றவர்களுக்குச் செய்' என்ற உத்தரவை வேறு யாரால் நிறைவேற்ற இயலும்?....... கிறித்துவைத் தேட வேண்டியதில்லை. கிறித்து பிஷப் மாளிகைகளில் இல்லை, நவீன ஆஸ்பத்திரிகளில் இல்லை; கிறித்து மலைகளில், காடுகளில்,இயற்கையில் இருக்கிறார். இயற்கைதான் கிறித்து. கிறித்துவை நேசித்தல் இயற்கையை நேசித்தல்தான்" (பக்: 147)

ஆக, தடுமாறிக் கொண்டிருக்கும் ஒரு கிறித்துவை லாரன்ஸ் மூலம் காட்டுகிறார் ஜெயமோகன். அவர் செயற்கை நிலையங்களில் வீற்றிருக்கத் தடுமாறுகிறார். அடுக்கடுக்கான கட்டிடங்களில் அவர் நிச்சயமில்லை. அவர் எளிமையிலிருக்கிறார். ஆடம்பரங்களில் இல்லை. அவர் கிறித்தவர்களிடம் இல்லை. அவர் கண்டங்காணிகளிடம இருக்கிறார்.

இனி, நாம் இரண்டாம் மாற்றுக் காலகட்டத்தை இதனோடு இணைத்தே காணவேண்டும்.

## இரண்டாம் மாற்றுக் காலகட்டம்

நாவலில், பெருவட்டரின் வீழ்ச்சி - தனி மனித அல்லது குடும்ப வீழ்ச்சியாகக் கூறப்பட்டாலும், அது பெருவட்டர் சமுதாயத்தின் வீழ்ச்சியே. அந்த வீழ்ச்சி முழுமையாக இல்லை. ஆனால், வீழ்ச்சி தொடங்கி விட்டதாகக் காட்டப்படுகிறது. இது ஒரு அடையாளம்;

உண்மையில் இது வெறும் அடையாளம் மட்டுமல்ல. மலைகளில் பல பெருவட்டர்களின் வீழ்ச்சி நடந்து முடிந்து விட்டது. ஆனால் நாயர்கள் குடிபெயர்ந்தது போல அல்ல; வீழ்ச்சிக்குப்பின் எஞ்சியதைக் கொண்டு வாழ்கிற ஆனால், பழைய வசதிகள் போய்விட்ட நிலை; இருந்தாலும் பழைய பெருவட்டர்கள் போன பின்னர் புதிய பெருவட்டர்கள் தோன்றி விட்டார்கள். காரணம் என்ன? நாவலில் ஆங்காங்கே சுட்டப்பட்டுள்ள ஒரு போராட்டத்தை இங்கே சொல்ல வேண்டியுள்ளது. அது தலைவர் நேசமணியின் போராட்டம்;

திருவாங்கூர் கொச்சியில் கிடந்த குமரி மாவட்டத்தைத் தாய்த் தமிழகத்தோடு இணைக்க வேண்டும் என்ற அந்தப் போராட்டம் மலைகளிலோ, பெருவட்டர்களிடமோ முதலில் தொடங்கப்படவில்லை. நாகர்கோயிலில் சிறிதாகத் தொடங்கிய போராட்டம் - முதலில் நத்தானியல் வக்கீலின் தலைமையில் நடந்தது. அந்தப் போராட்டத் தலைமைத்துவம், நத்தானியலின் கையிலிருந்து நேசமணிக்கு மாறியபோது வலுக்கத் தொடங்கியது.

அப்போது இந்தப் பெருவட்டர்கள் விழித்துக் கொண்டார்கள். மலையாள அரசு அப்போது நிரந்தரமல்ல. விழுவதும் எழுவதுமாயிருந்த அரசு.கம்யூனிச அரசு வந்துவிடக்கூடும் என்ற அச்சம் பெருவட்டர்களிட மிருந்தது. பட்டம் தாணுபிள்ளையின் அரசும் ரப்பர் மார்க்கட்டுக்கு எதிராயிருந்தது. பெருவட்டர்கள் இந்தப் போராட்டத்தைப் பயன்படுத்திக் கொண்டார்கள். வேறு வகையில் சொல்வதானால், நாடார்கள் எப்படிக் கிறித்தவ மதத்தைப் பயன்படுத்திக் கொண்டார்களோ, அப்படியே இந்தத் தருணத்தில், தாய்த் தமிழக இணைப்புப் போராட்டத்தைப் பயன்படுத்திக் கொண்டனர். போராட்டத்திற்குப் பணம் கொடுத்தார்கள்; ஈடுபட்டார்கள்.

பொதுவாக, அந்தப் போராட்டமும் நாடார், நாயர் போராட்டமே. ஆனால், அது அனைத்துக் குமரி மாவட்ட மக்களின் போராட்டமாகக் காட்டப்பட்டது. அதில் வெள்ளாளர்கள் இருந்தார்கள், இசுலாமியர் இருந்தார்கள், தாழ்த்தப்பட்ட மக்கள் இருந்தார்கள்.

போராட்டத்தின் தனிச் சிறப்பு இந்து நாடார்களும், கிறித்தவ நாடார்களும் இணைந்து நின்றார்கள் என்பதுதான். பட்டம் தாணுபிள்ளையின் அரசு துப்பாக்கியால் சுட்டது. அன்று குடியான்

கலவரத்தில் நாடார்கள் வெட்டிச் சாய்க்கப்பட்டதாக நாவல் கூறும் செய்தி போலத்தான் இதுவும். ஆனால், துப்பாக்கியால் சுட்டுக் கொல்லப்பட்டார்கள். பெரும்பாலும் விளவங்கோடு, கல்குளம் தாலுகாவிலுள்ள நாடார்களே உயிரிழந்தார்கள்.

அந்தப் போராட்டம் வெற்றி பெற்றுக் குமரி தாய்த்தமிழகத்தோடு இணைந்த பின்னர் நிலமை மாறியது. பெருவட்டர்கள் பெரிய வீழ்ச்சியிலிருந்து தப்பினார்கள். ஆனால், நாவல் கூறும் வீழ்ச்சியின் அடையாளங்கள் பின்னரும் இல்லாமல் இல்லை. ஆடம்பர வாழ்க்கையும், 'போக' நாட்டமும் இன்றும் சிலரை வீழ்த்திக் கொண்டுதான் இருக்கிறது. செல்லையா பெருவட்டர்கள் - பெருவட்டத்தி போன்றவர்கள் எங்குதான் இல்லை? அவர்கள் இருக்கிற இடங்கள் வீழ்ச்சியைச் சந்திக்காமலிருக்க முடியுமா?

ஆசை - பேராசையாக மாறிப் பெருவட்டர்களுக்குள் இன்று சில இடங்களில் பகையும், அடி தடிகளும் தொடங்கிவிட்டன. மண்ணாசை அழிவுகளை வெகு விரைவாகப் பதிக்கத் தொடங்கிவிட்டது எனலாம்.

கோட்டயம் மாப்ளாக்கள் - ரப்பரின் முன்னோடிகள் காலத்துக்காகக் காத்திருக்கிறவர்கள். இவர்களில் அநேகர் கோட்டயத்தில் மதம் மாறிய நாயர்கள் எனத்தெரிகிறது. காலமாற்றம் எதை எப்படிச் செய்யும் என்று சொல்ல முடியாது.

இந்த இடத்தில் தான் கிறித்தவத்தின் இன்றைய நிலையைச் சம்பந்தப்படுத்த முடிகிறது. கிறித்தவப் பெருவட்டர்களின் வாழ்க்கையைப் போலியென்று அடையாளம் காட்டுகிறது நாவல். அதோடு அங்கே பிரார்த்தனைக்காய்ப் படியேறும் போதகர்களும் போலியானவர்கள் என்று அடையாளம் காட்டுகிறது; உதாரணம், பாஸ்டர் ஜோசப் ராஜேந்திரன். ஆடம்பரமான இந்தத் 'திருச்சபை மனித'ரால் சாவுக்கு பிரார்த்தனை செய்யமுடியாது என்பதே மூத்த பெருவட்டரின் கருத்து. ஆயிரம் ரூபாய் வாங்கியும் அவர் அமைதிபெறவில்லை. சபைக்குத் தெரிவித்து, செய்தி புகாராகப் பிஷப்புக்கும் போய்விட்டது. ஆக, ஒரு ஆடம்பரமான தனி நபரல்ல, ஆடம்பரமான திருச்சபை அமைப்பின் உயர் அடுக்கு காட்டப்படுகிறது. அது சாதி உயர் அடுக்கைவிட ஆபத்தானதாகத் தெரிகிறது.

**சபை உயர் அடுக்கு**



இந்த உயர் அடுக்கு எந்திரம் பழுதாகிவிட்டதாகத் தெரிகிறது. ஆனாலும், இந்த அமைப்பு ஒரு விதத்தில் அதைச் சார்ந்த மக்களுக்குப் பாதுகாப்புத் தரவே செய்கிறது என்பதை இன்றைய சூழலில் மறுத்துவிட முடியாது. ஆனால், இந்தப் பாதுகாப்பு, கிறித்துவற்ற பாதுகாப்பு. எனவே தான் நாவலில் லாரன்ஸ் சிந்திப்பது போல, 'கிறித்து நவீன ஆஸ்பத்திரிகளிலோ, பிஷப் மாளிகைகளிலோ இல்லை' என்பது அர்த்துமுள்ளதாகிறது.

அப்படியானால் திருச்சபை இன்றைய அமைப்பு நிலையில், ஒரு காலக்கட்ட வீழ்ச்சியை அடைந்துவிட்டது. அல்லது எதிர்நோக்கியிருக்கிறது என்று அர்த்தமாகிறது. அவ்வாறானால் கிறித்தவம் எப்படியிருக்க வேண்டும்? அது கண்டங்காணியாக இருக்க வேண்டும் என்பதே நாவல்தரும் செய்தி. ஆக, கண்டங்காணி, உண்மையான கிறித்தவத்தின் குறியீடாக நிற்கிறார்.

கிறித்தவத்தின் அடிமட்டப் பொருள் சரியாக எடுத்தாளப் பட்டிருப்பதாகக் கூறலாம். ஊசிகளின் காதுகளும், ஒட்டகங்களும் இதைக் குறிப்பாய்க் காட்டுகின்றன. ஆனால், நாம் முன் நாவல் ஆய்வுகளில் குறித்தபடி, மிக முரணாக, கிறித்தவம் செல்வந்தர்கள் பக்கம் சாய்ந்துவிட்டது. இது ஒரு காலக்கட்ட வீழ்ச்சிதான்.

இனி, ஃபிரான்சிசிடம் லாரன்ஸ் கூறுவது, "ஆகாயத்துப் பறவைகள் விதைப்பதில்லை, அறுவடை செய்வதில்லை" என்பது. இதில் விடப்பட்ட முக்கியமான தொடர், அழுத்தப்படாமல் போயிற்று; அது - "அவை களஞ்சியங்களில் சேர்த்து வைப்பதுமில்லை."

இது கூறும் உண்மைதான் என்ன? நாவல் மூலம் படைப்பாளி சுட்டுவதுதான் என்ன? ஒரு சமுதாய மாற்றமா? இந்த எடுத்துக்காட்டின் மூலம் ஆசிரியர் ஒரு கனவுலகைக் காண்கிறாரா? இருக்கலாம்; அது அவரின் சத்தியத்தின் ஒளியையும், அந்தரங்க ஆசையையும் வெளிப்படுத்துகிறது. இதுவே, பிரச்சினைகளுக்கு அவரின் விடையாகவுமிருக்கிறது.

பிரச்சினைகளுக்கு அவர் கூறும் இந்த விடை பற்றி, நாமினி, மூன்று நாவல்களையும் ஒப்பாய்வு செய்யும் போது அதிகம் ஆராயமுடியும்.

### புத்தம் வீடு, கீறல்கள், ரப்பர் - ஓர் ஒப்பாய்வு

'ஒரு புளிய மரத்தின் கதை'யைத் தோற்றுவாயாகக் கொண்டு நாம் ஆய்வு செய்தவை ஒப்பாய்வில் மட்டுமே முழுமை பெறும். எனவே, 'புத்தம் வீடு', 'கீறல்கள்', 'ரப்பர்' என்று - மூன்று நாவல்களையும் இங்கே ஒப்பாய்வு செய்கிறோம்.

கிறித்தவம், அமைப்பாக மாறி, திருச்சபைக் கோயில்கள் ஆங்காங்கே அனலிழந்த பின்னணியில் புத்தம் வீடு பிறக்கிறது. இதன் ஒரு போக்காக (Parallel) வீழ்ச்சியடைந்து கொண்டிருக்கும் நில பிரபுத்துவப் பிரதிநிதியான கண்ணப்பச்சியின் குடும்பக் கதை கூறப்படுகிறது.

கீறல்கள், கிறித்தவம் உச்சக்கட்ட அமைப்பாக மாறிய பின்னர், திருச்சபை பணக்காரர்களின் கைக்குள் சிக்கி, நிலஉடைமைச் சமுதாயத்தின் பிரதிநிதியாக மேட்டுக்குடியார்கள் தோன்றியபின், ஒதுக்கப்பட்டுப் போன முத்தையாவின் குடும்பக் கதையைச் சொல்லுகிறது.

ரப்பர், நாயர்களின் எஸ்டேட் முதலாளித்துவ வீழ்ச்சியையும், கிறித்தவத்தால் முன்னேறி பின்னர் உழைப்பால் எஸ்டேட், முதலாளித்துவத்துக்கு வந்துவிட்ட கிறித்தவ நாடார் பெருவட்டர்களையும் - கிறித்தவ அமைப்பு செயலிழந்து எந்திரமாகிவிட்ட நிலையில், பாதிரிகளின் போலித்தன, ஆடம்பர நிலைகளையும் - ஒழுக்க ரீதியாக வீழ்ந்து கொண்டிருக்கும் பெருவட்டர்களின் குடும்ப நிலையையும், பின்னர் அதிக ஆசையால் அழிவின் விளிம்பைத் தொட்டுக் கொண்டிருக்கும் அவர்களின் அழிவின் அடையாளங்களையும் எடுத்துச் சொல்லுகிறது.

**கண்ணப்பச்சி, முத்தையா, பொன்னுமணி பெருவட்டர்**

புத்தம் வீடு கண்ணப்பச்சியை, அவரின் முதுமை நிலையில் படம்பிடிக்கிறது. அது குறியீடாக, வீழ்ந்து கொண்டிருக்கும் நிலஉடமைச் சமுதாயத்தைக் காட்டுகிறது; அதன் பிடிவாதங்களை விளக்குகிறது. அழிந்து கொண்டிருக்கும் போதும், அந்தச் சமுதாயம் - பழமைச் சம்பிரதாயங்களை; பெருமைகளைத் தக்க வைத்துக் கொள்ளவே முயல்கிறது என்பதைக் கண்ணப்பச்சியின் மூலம் நாவல் ஆசிரியை காட்ட விழைகிறார். சாதிக்குள் சாதி பிறந்து, நில பிரபுத்துவம் - தொழிலாளியைத் தொடத்தகாதவனாகக் கருதுகிற அபத்தம் தெளிவாகச் சொல்லப் படுகிறது.

கீறல்களில் முத்தையா, கீழ்த்தட்டுக் கிறித்தவராகக் காட்டப்பட்டு - ஆன்மீக நிலையில், போராடுவது பாவம் என்ற கருத்தாக்கத்துக்குள் நிற்கிற பேதை மனிதராகக் காட்டப்படுகிறார். இது ஒரு காலக் கிறித்தவ நம்பிக்கை என்று தெரிகிறது. சொர்க்கம், நரகம் என்ற ஆதி காலக் கோட்பாட்டால், இன்னொரு உலகைச் சொர்க்கமாக எண்ணி, அது கிடைத்தால் போதும் என்கிற தவறான - அல்லது விளங்காத ஆன்மீக நிலை அது. எனவே, இந்த உலகில் ஏழ்மை ஒரு பாவமல்ல. அதைத் தாங்கிக் கொள்வதால் சொர்க்கவாசல் மறுமையில் திறக்கும் என்ற ஒருதலைப்பட்சமான கருத்துக்குச் சொந்தக்காரராக நிற்கிறார். இவரின் இதே வகையான சிந்தனையின் தாக்கமே அவரின் மனைவி மேரியிடமும் ஊறியுள்ளது. மேட்டுக்குடியாரின் செல்வம் கடவுளின் ஆசியால் வந்தது என்ற கருத்தோட்டம் இதைத்தான் தெளிவாக்குகிறது.

இவருக்கு முற்றிலும் முரணாகத் திருச்சபையால் வறுமையை ஒழிக்க முடியும் என்று உறுதியாக நம்புகிறவராகச் சாமுவேல் நாட்டையர் நிற்கிறார். இவருக்கு முரணாக ஆன்மீகம் தழுவிய கம்யூனிசப் போராட்டமே வறுமையை ஒழிக்கும் என்று பூரணமாய் நம்புகிறவராய் வேதமணி வாத்தியார் நிற்கிறார்.

கண்ணப்பச்சியும் முத்தையாவும் பாத்திர அடிப்படையில் வேறு படுகிறார்கள். ஒருவர் நிலஉடமைச் சமுதாயத்தின் கடைசி மனிதர். மற்றவர் கீழ்த்தட்டு வர்க்கத்தில் ஒரு சாதாரண மனிதர்.

ரப்பர் காட்டும் பொன்னுமணி பெருவட்டர் மிகச் சாதாரண அல்லது அதைவிடவும் கீழான - பசிக்கும் பட்டினிக்கும் ஆளான அடிமட்டப் பிரதிநிதியாகக் காட்டப்பட்டு, குடியான் கலவரத்தால் அகதியாய் மலைக்கு இடம் பெயர்ந்து உழைப்பால் உன்னத நிலை பெற்று, முதலாளித்துவச் சமுதாயத்தின் பிரதிநிதியாகக் காட்டப்படுகிறார். இவரின் கடைசிக் கால வருணனைகள் இரண்டாம் காலகட்ட வீழ்ச்சிக்கான அடையாளமாக நாவலில் இடம்பெறுகிறது.

படுத்த படுக்கையாய்க் கிடக்கிற பெருவட்டர், அழிந்து கொண்டிருக்கும் ஆடம்பரச் சமுதாயத்தின் பிரதிநிதியாகவும் நிற்கிறார். அவரின் அரண்மனை போன்ற வீடு, வாகன வசதிகள் அனைத்தும், கற்பனைச் சாம்ராஜ்யக் காட்சியாகத் தோன்றினாலும், அவை 'நிஜம்' என்பது பெருவட்டரைப் பொறுத்த வரைக்கும் சரியே. இந்த ஆடம்பரக் கிறித்தவ வாழ்க்கைக்கு எதிர்க்குரலாக - கிறித்தவம் அழகுறக் காட்டப்படுகிறது. ஆகாயத்துப் பறவைகள் விதைப்பதுமில்லை, அறுப்பதுமில்லை என்ற பாவிகக் குரல் சரியான கட்டங்களில் எழுப்பப்படுகிறது. இந்தக் குரலை எழுப்புகிற வாய், அடி மட்டத்தில் நசிந்துபோய்க் கிடக்கிற பாட்டாளியல்ல. சமூக அந்தஸ்தைப் பெற்றுவிட்ட டாக்டர். எனவே இந்தக் குரல் நாவலில் வலுப்பெற்றே நிற்கிறது.

பெருவட்டருக்கு முரணாகப் படைக்கப்பட்டுள்ள கண்டங்காணி, இயற்கைச் சுற்றுப்புறச் சூழலை அழிக்காமல் - அதிகமான ஆசைகளுக்குத் தன்னைப் பலிகொடுக்காமல் - அதே வேளையில் பேரனை டாக்டராகக் காண்கிற பேறு பெற்றவராகக் காட்டப்படுவது சிந்திக்க வேண்டிய செய்தியாகிறது.

கண்ணப்பச்சியின் சாயல், பெருவட்டரிடம் இருப்பதாகத் தெரிகிறது. முன்னவர் உள்ளூர் சார்ந்த பழைமைத்துவ நிலஉடமைச்சமுதாயத்தை நினைவூட்ட, பின்னவர், மலை சார்ந்த எஸ்டேட்டின் முதலாளித்துவச் சமுதாயத்தை நினைவூட்டுகிறார். கண்ணப்பச்சியின் படுக்கை இரு பெஞ்சுகளால் ஆனது. பெருவட்டரின் படுக்கை கட்டில்.

பழமையான ஓடுபோட்ட ஆனால் பரந்த - பழைமையை நினைவூட்டும் வீடு கண்ணப்பச்சிக்குரியது.

'பிரிட்டீஷ்' மாதிரி (BRITISH MODEL)யில் அரண்மனையை மிஞ்சும் - கலக்டருக்கு விருந்து வைக்கக் கூடிய கலையழகு நிரம்பிய மாளிகை பெருவட்டருக்குரியது. இரண்டு வீடுகளும், ஒரு காலகட்ட பெருவாழ்வை எடுத்துக்காட்டுவன. ஆனால், இவற்றின் இருப்பு நிரந்தரமல்ல; வரப்போகிற அழிவு குறிப்பாய்ச் சுட்டப்படவே செய்கிறது. இதற்கான முன்னைய உதாரணம் உண்டு. அது, அப்புக்குட்டன் நாயரின் எட்டுக்கட்டு வீட்டின் மூலம் சொல்லப்படுகிறது.

தம்புரானின் கொடி பறந்த போது, எஸ்டேட்டில் அவரின் வீடு, நாயர்களுக்கே உரிய கட்டடக்கலை அமைப்பில் - பழமையின் வேர்களைப் பரவவிட்டு - எட்டுக்கட்டாக எழும்பிநிற்கிறது. கீழ்ச்சாதிக்காரர்கள் முற்றத்துப் படிகளில் கூட கால் வைக்க முடியாது. ஆனால், ஒழுக்க ரீதியான கீழ்நிலையாக்கத்தால் நசிந்து, அப்பி பெருவட்டரின் கைக்கு மாறுகிற போது இடித்துத் தள்ளப்படுகிறது. நெறிமுறைகள் தவறும்போது, ஒருவேளை காலம் அதை மன்னிக்காது என்றே தோன்றுகிறது.

முத்தையாவின் வீடு, கனவுகளில் நிறைவேறாத தோற்றமே. முன்பகுதி முடிக்கப்படாமல், கூரை இரண்டு பனங்கம்புகளின் பலத்தில் நிற்கிறது. நடுத்தர வர்க்கத்தின் அடித்தட்டில் நிற்கிற ஒரு சாதாரணக் குடும்பத்தின் போராட்டத்தை அது குறியீடாகக் காட்டுகிறது. அதோடு அவர் சார்ந்த திருச்சபையாலோ, அல்லது 'பாலும், தேனும் ஓடும்' என்று வாக்குறுதியளிக்கப்பட்ட சுதந்திரத்தாலோ, அல்லது, சமத்துவம் நிறுவவந்த குடியாட்சியாலோ கவனிக்கப்படாத ஒரு வீடு அது. அந்த வீடுதான், நக்சலைட்டுகளை உருவாக்கும் கேந்திரமாகக் காட்டப்படுகிறது. அந்த வீடுதான், சுயநலவாதியான அடுத்த கட்ட முதலாளியை உருவாக்குகிற உற்பத்தி 'ஸ்தான'மாகவும் காட்டப்படுகிறது. அந்த வீடே 'முரண்' கொண்ட அமைப்பு.

கீழ்மட்ட நடுத்தர வர்க்கம் இருவேறு கருத்தாக்கங்களின் பிறப்பிடம். அதில் ஒரு பகுதி, தீவிரவாதத்துக்குத் தூண்டப்படுகிற சூழ்நிலை அங்கு உண்டு. இன்னொரு பகுதி - இதுவே பெரும்பான்மை - நாளையேனும் பணக்காரராகி விடக்கூடும் என்ற நம்பிக்கையில் நகர்கிறது. இதன் கனவு, முதலாளித்துவச் சமுதாயமே. அந்தக் கனவு நிறைவேற்றத்துக்காய் அது சில பயிற்சிகளை மேற்கொண்டு, மனித உறவுகளை அறுத்தெறிந்துவிட்டு முன்னேறத் துடிக்கிறது.

இங்கே மகளிர் - அடுத்த வாழ்க்கைக்குக் குடும்பத் தலைவனை மட்டுமே நம்பியிருக்கிற பொம்மைகள். குடும்பத்தலைவனுக்குக்

கட்டுப்பட்டு அடங்கி, ஒடுங்கிச் செயல்படுவது பாரம்பரிய இயல்பாக நிற்கிறது. குடும்பத் தலைவன், தன் வசதிக்கேற்ப கைகாட்டும் திசை நோக்கி இவர்கள் நடக்க வேண்டும்; அது ஒன்றுதான் இவர்களுக்குப் பாதுகாப்பானது.

இவர்களின் திருமணம் கூடச் சமூகப் பழக்க வழக்கங்களுக்கேற்ப நடைபெறும். அந்தத் திருமணத்துக்கென்று சில குறிப்பிட்ட அலங்காரங்கள் உண்டு. அது 'ரீத்' வைத்துக் கட்டப்பட்ட தலையலங்காரம். தேவாலயத்தில் வைத்து நடைபெறும் அந்தத் திருமணத்தில், பரிசுத்த இடத்தை அணுகி, மணமகனோடு நிற்கும் பெண்ணை, போதகர், 'இந்தப் பெண்ணைக் கைபிடித்துக் கொடுக்கிறவர் யார்' என்று கேட்டதும், தகப்பன் எழுந்து வந்து அவளின் கையைப் பிடித்து மணமகனின் கையோடு பிணைக்க வேண்டும். இனி, 'கடவுள் இணைத்ததை மனிதன் பிரிக்காதிருக்கக் கடவன்' என்ற போதகரின் எச்சரிப்போடு, ஆசியோடு அது முடியும். கை பிடித்துக் கொடுக்காமல் திருமணச் சடங்கு இல்லை. ஆக, சடங்குகளால் நிறைந்து - சிறுதெய்வ வழிபாட்டிலிருந்து முற்றிலும் நீங்காத - ஒரு சமூகமாகவே இது காட்டப்படுகிறது.

பெண், சமூகத்தின் உறுப்பு என்று மறுக்கப்பட்ட நிலையில், அவள் தாயாகும் போது மட்டுமே அவளுக்குரிய ஒரு வகையான மதிப்பை அது அளிக்கிறது. ஆனால், அந்தத் தாயும் கூட, அடங்கி ஒடுங்கி, வசதிக்கேற்ப, உண்ணாமல், உறங்காமல், குடும்பத்தைக் கட்டி எழுப்ப முயற்சி செய்கிறவள். அவளின் தோல்விகளையும், மவுனமான அழுகைகளையும் யாரும் கண்டுகொள்வதில்லை. அதே வேளையில் அவள் கற்புடன் இருக்க வேண்டும் என்ற ஆண்வர்க்கத் திணிப்பும் கட்டாயமானதாக அவள்மேல் நயவஞ்சகமாக ஆளுகை செய்கிறது. ஆக, அவள் சிரிப்பு கூடச் சில நேரங்களில் அவளுக்கெதிரான தீர்ப்பை வழங்குகிறது.

இதே தவறை மேல்மட்டச்சமுதாயப் பெண் செய்வது நாகரிகத்தின் பாற்பட்டதாகிறது. பெருவட்டத்தி அதைச் செய்வது மகனுக்குப் பிடிக்காதிருக்கலாம், ஆனால், சமுதாயம் அதைக் கண்டுகொள்வதில்லை. அவளின் ஆடம்பரங்களும், கற்பின்மையும் முரணாக அல்லாமல் ஒன்றிய இயல்பாக நிற்கின்றன. ஒருவேளை இதற்கு ஒருவித அங்கீகாரம் கூட இருப்பதாகக் கூறலாம்.

லிசி, பண்பாட்டு அடித்தளத்தில் நிற்கிற அல்லது உறுதியாகக் கால் கொண்டுள்ளவளாக உருப்பெற்றுள்ளாள். அதிலிருந்து இம்மியும் பின்வாங்கத் தயாரில்லை. காதலுணர்வு அவளின் பாண்பாட்டுச் சீரழிவுக்கு வழி வகுக்கவில்லை. மாறாகப் பண்பாட்டுத் தளத்துக்கு உறுதி சேர்க்கிறது. காதலில் கன்னிமை இழக்காப் பழங்காதல் இது. அதோடு தங்கராஜ்

'இறங்கிவா' என்கிற போதும் அவளின் பண்பாட்டு இறக்கம் வலுவிழக்கவில்லை. இது பழமை வாதத்தோடு, கிராமியப் பின்னணி கொண்டதுபோலவே தெரிகிறது.

இங்கும் பெண் அடிமை நிலையில்தான் சித்திரிக்கப்படுகிறாள். "இற்செறிப்பு', பழமை தழுவியது; பண்பாட்டுக் கூறு; ஆனல், 'உடன் போக்கு' ஒருவகைத் திருமணமாகச் சொல்லப்பட்டிருக்க, இவள் அதை மறுத்து நிற்பது நாடார்களின் கட்டமைப்பின் உறுதியை வெளிப்படுத்துகிறது. இதை, இனப் பண்பாடு தழுவியதாகக் கொள்ளலாம். இதே சமுதாயத்தில், ஓடியவர்களின் கதையும் இருக்கக் கூடும்; ஆனால், லிசியின் படைப்பு, படைப்பாளியின் உள்ளப் பிரதிபலிப்பின் விளைவே; ஆனால், அவ்வாறு சிந்திக்காமல், ஒரு இனத்தின் உள்ளப் பிரதிபலிப்பு என்று கொள்ளலாம்.

**திருச்சபைக் கட்டமைப்பு**

புத்தம் வீடு கிறித்தவத் திருச்சபையின் கட்டமைப்பின் சீர் குலைவை ஒரு தேவாலயத்தின் மூலம் காட்ட முனைகிறது. அது பனைவிளை தேவாலயம். அது 'அனலும் குளிருமற்ற திருச்சபை' அதன் மூப்பர் கண்ணப்பச்சி, வெறும் மரியாதை காரணமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர். மற்றபடி அவருக்கு அந்தத் தகுதியில்லை. அதன் உபதேசிக்கும் அந்தப் பணிக்கான எந்தத் தகுதியும் கிடையாது. அது ஆவிக்குரிய (SPIRITUAL) போக்குகளை விட்டு உலகியலுக்குத் திரும்பிவிட்ட திருச்சபை.

புதிய உபதேசியும், படித்தவரே தவிர, பிரச்சினைகளைத் தீர்த்து வைக்க குறைந்த அளவு ஒரு 'உரையாடல்' (DIOLOGUE) நடத்தக் கூடத் தயாரில்லை. ஆக, இத்தகையத் தேவாலயங்கள் கிறித்துவை இழந்தவை என்பதே குறிப்பாய் உணர்த்தப்படுகிறது.

கீறல்கள், ஒரு தேவாலயத்தை மட்டும் எடுத்துக் கொள்ளாமல், அமைப்பை எடுத்துக் கொண்டு - ஆன்மாவுக்குச் சோறிடும் திருச்சபை, வயிற்றுக்கும் சோறிட வேண்டும் என்கிறது. ஆனால் உண்மை அதுவல்ல; திருச்சபை ஆன்மாவுக்கும் சோறிடவில்லை, வயிற்றுக்கும் சோறிடவில்லை. இந்தத் திருச்சபை, முற்றிலும் பணக்காரர்களின் பக்கம் சாய்ந்த திருச்சபை என்பதால் வேதமணி வாத்தியார் கம்யூனிசம் பற்றிச் சிந்திக்க வேண்டியவராகிறார்.

சாமுவேல் நாட்டையர் வித்தியாசமான போதகரே. அவர் போதகர்களின் பிரதிநிதியாக இல்லை. அவர் அங்கியுடன் போராட்டத்தில் குதிக்கிறார். இதே மாதிரியான அங்கியைக் கழட்டிக் கிழவியின் குளிர் நடுக்கத்தையும் தீர்த்தார் என்பதைக் கவனிக்க வேண்டியிருக்கிறது. அது

அவரின் பணிக்குரிய மனிதாபிமானம்; திருச்சபையில் ஒரு காலையும். போராட்டக் களத்தில் ஒரு காலையும் வைத்து நிற்கிற சாமுவேல் நாட்டையர், கம்யூனிசக் கருத்தாக்கம் கொண்டவரல்ல. திருச்சபையில் ஒரு முற்போக்கு வாதி. திருச்சபையால் பிரச்சினைகளைத் தீர்க்கமுடியும் என்ற கருத்தாக்க உறுதி அவருக்குண்டு. எது எப்படியிருந்தாலும், திருச்சபையின் இயலாமை இவர் மூலம் வெளிப்படுகிறது.

கிறித்தவர் அல்லாத - ஆனால் கிறித்தவம் பற்றிய தெளிவான சிந்தனை கொண்ட - ஜெயமோகன், இன்னும் ஒருபடி மேலாய் நின்று, திருச்சபையின் அமைப்பை வாருகிறார். அதற்கு அவர் பாஸ்டர் ராஜேந்திரனை ஒரு பாத்திரமாக்குகிறார். ராஜேந்திரனின் ஏழுபவுன் சங்கிலி உலகியல் சம்பந்தப்பட்டது. அது ஆடம்பரத்தின் குறியீடு. இங்கு எழுகின்ற கேள்வி, இத்தகைய ஆடம்பர விரும்பியால் எவ்வாறு மக்கள் பணி செய்யமுடியும் என்பதே. பணிக்களத்திலிருந்து தூரமாய் விலகிப்போன பாஸ்டர், இன்றைய பாஸ்டர்களின் பிரதிநிதியே. இவரால் திருமணப்பிரார்த்தனை மட்டுமே நடத்த முடியும் என்ற பெருவட்டரின் கருத்து ஆழமானது. ஆக, திருச்சபை, தொண்டு நிலையிருந்து சரிந்து விட்டதை நாவல் சுட்டுகிறது. இது சமுதாயச் சரிவுக்கு வழிவகுக்கக் கூடியது.

கோபத்தில் ஏசுவை வசை பாடிவிட்டு, அதே எசுவின் பெயரால் ஆயிரம் 'ரூபாயைப்' பெற்றுக் கொள்ளவும் இவரால் முடிகிறது. பெற்றுக் கொண்ட பணத்துக்காய் இவர் நன்றியுடனிருக்கிறாரா என்றால் அதுவுமில்லை. மாறாகப் பெருவட்டரைப் பற்றிய புகாரை மேலிடத்துக்கு அனுப்பி வைக்கிறார். ஒரு அமைப்பைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்துவதன் மூலம், திருச்சபையைத் தொழிற்சங்கப் பார்வை பார்க்கிறார் இவர் என்று கூறுவது பொருந்தும். அதாவது, இவருக்குத் திருச்சபை தொழிற்சங்கமே.

திருச்சபை, மக்கள் பணியிலிருந்து விலகி நிற்பதும், அது தன்னைப் பாதுகாத்துக் கொள்ள அல்லது அமைப்பைப் பாதுகாத்துக் கொள்ள நினைப்பதும் தெளிவாகிறது. ஆனால், திருச்சபை பெருவட்டர் மேல் என்ன நடவடிக்கை எடுக்கக் கூடும்! எடுக்கக் கூடிய நிலையில் திருச்சபை இருக்கிறதா என்பது கேள்வியாகவே நிற்கிறது. காரணம் திருச்சபைக்குப் பணக்காரர்களும் வேண்டும். இதே பெருவட்டரின் வீட்டில் 'பிஷப்' விருந்துண்டார் என்பது மறந்துவிடக் கூடியதல்ல.

ஆனால், திருச்சபைக்கு நேர் மாறான ஒரு கிறித்தவர் நாவலில் காட்டப்படுகிறார். ஆதிவாசியான கண்டங்காணி, தம்மளவில் ஒரு பரந்த திருச்சபையாக நிற்கிறார் எனலாம். கண்டங்காணி என்ற தனி மனிதர், திருச்சபையின் 'மாதிரி (A MODEL CHURCH) என்று ஆராய்வதில் தவறில்லை

ஏசு கிறித்துவின் இருத்தல், இயற்கையின் நடுவில் என்ற கருத்தாக்கம் – சுற்றுப்புறச் சூழலைக் கெடுத்துக் கொண்ட ஒரு சமூகத்தின் நடுவில் அல்ல என்பதை நாவல் தெளிவாக்குகிறது.

## பிரச்சினைகளுக்குத் தீர்வுகள்

பிரச்சினைகளுக்கான தீர்வுகளில் மூன்று நாவல்களும் வேறுபடுகின்றன.

புத்தம் வீடு நாவலில் பிரச்சினை வேறு; அது லிசிக்கும், தங்கராஜுக்கும் திருமணம் முடித்தல் பற்றியது. அதற்கு ஆசிரியை நாவல் களத்தைப் பயன்படுத்துகிறார். இங்கு, வேறு எந்தத் தலையீடும் தேவையற்றது.

திருச்சபை இதில் தலையிடாது என்ற நிலை, புதிய உபதேசியாரால், தங்கராஜுக்கு கூறப்பட்டது. இந்த நிலையில்தான் படைப்பாளி சாதாரண நாவல் உத்தியைக் கையாண்டு, லிசியின் சித்தப்பாவின் சாவையும், அவளின் தகப்பனின் சாவையும் பிரச்சினைகளுக்குத் தீர்வுகளாகக் கொண்டு வருகிறார். ஆனால் நடப்பியலில் இத்தகையத் தீர்வுகளை எதிர்பார்க்க முடியாது.

ஏப்சிபா ஜேசுதாசன் நாவல் எழுதிய காலகட்டத்தைச் சிந்திக்கிற போது, அவரின் இந்தத் தீர்வை ஒரு குற்றமாகக் கருதவும் முடியாது. கற்பனா வாதத்தை மீறி யதார்த்தவாதத்திற்கு வருகிற போது கற்பனாவாதத்தின் தாக்கம் இருக்கவே செய்யும். அதுவும் நீண்ட நெடுநாட்களாக வரலாறு படைத்த கற்பனாவாதம் அவ்வளவு எளிதில் விடை பெற்றுவிடாது.

கற்பனாவாதத்தை உடைத்து விட்டு, குமரி மண்ணில் எழுகிற முதல் நாவல் இது என்பதை மறந்துவிடக் கூடாது. இதனால் கற்பனா வாதம் எங்கேனும் ஓரிடத்தில் ஒட்டிக் கொண்டுதானிருக்கும்.

இத்தகைய நிலையை 'நாவல் தன்மை' என்று கூறலாம். முழுமையான யதார்த்தநாவல், 'நாவல் தன்மை' அற்றது. அதற்குக் கதை கூடத் தேவையில்லை. கதை தேவை என்று கருதும் போதுதான், சில சம்பவங்களுக்குத் தீர்வும் தேவைப்படுகிறது.

இங்கே அடிமட்ட பிரச்சினை இதுவல்ல; கோளாறு, லிசியிடமோ, தங்கராஜிடமோ, சித்தப்பாவிடமோ, அல்லது தகப்பனிடமோ இல்லை. சமூகத்தில் உள்ள கோளாறு அது. விரிவான சிந்தனையற்ற, சிந்தனையை விரிவுப்படுத்திக் கொள்ளாத ஒரு சமூகம் குற்றப்பட்டு நிற்கிறது என்பதே உண்மை.

திருச்சபைத் தேவாலயங்கள் கூட இந்தச் சமுதாயச் சிந்தனையை விரிவுப்படுத்துகிற கருத்தாக்கங்களை முன்வைக்கத் தவறிவிட்டன;

சாதீயத்தை உள்வாங்கிய திருச்சபை, சாதீயத்திற்கு எதிரான பிரச்சாரத்தை முன்வைக்கவில்லை. அது குறுகிய வட்டங்களாகப் பிரிந்து செயல்படுவதாகவே தெரிகிறது. வட்டங்களை உடைத்து விட்டுப் பொதுமை எண்ணங்களுக்கு அது வழிவகுக்கவில்லை. சாதீயத்தை ஏற்கிற ஒரு சமுதாயத்திற்கு எதிராக எந்தவிதமான குற்ற உணர்வுகளையும் அது எழுப்பவில்லை. இதனால்தான், கீழ்ச்சாதிகளுக்குத் தென்னிந்தியத் திருச்சபையும், தாழ்ந்த சாதிகளுள் ஒரு பிரிவுக்கு லுத்தரன் திருச்சபையும், இன்னொரு பிரிவுக்கு இரட்சணிய சேனை திருச்சபையும் தேவைப்பட்டன. கிறித்துவைப் பொதுமைப் படுத்த வேண்டிய கிறித்தவம், அவரை வட்டங்களுக்குள் சிறை வைத்து, அவர் வட்டங்களுக்குள் இருப்பதாக நினைத்துக் கொண்டிருக்கிறது.

இந்த இடத்தில், 'ரப்பர்' நாவல் நிச்சயமாக உயர்ந்து நிற்கிறது. அது இந்தத் திருச்சபைக்குள் கிறித்து இல்லை என்பதைப் பகிரங்கமாகவே அறிவிக்கிறது. புத்தம் வீட்டிலிருந்து ரப்பர் வேறுபடுவதற்கும், துணிந்து உண்மையைக் கூறுவதற்கும் காலகட்ட வேறுபாடு காரணம் எனலாம். ஜெயமோகனின் காலகட்டம், எப்சிபா ஜேசுதாசனின் காலகட்டத்தை விடப் பிந்தியது.

வேறொன்றையும் சிந்திக்க வேண்டியதாகிறது. எப்சிபாவின், புத்தம் வீடு பிறந்த காலத்தில் அவர் பெற்றிருந்த வாழ்க்கை அனுபவங்களை விட, ரப்பர் எழுதிய ஜெயமோகன் அவர் காலகட்டத்தில் பெற்றிருந்த வாழ்க்கை அனுபவங்கள் கூடுதல்; அவை கசப்பானவையும் கூட.

சரிந்து போன நாயர் குடும்பத்திலிருந்து தப்பித்து - வீட்டை விட்டு வெளியேறி, அலைந்து திரிந்து, மடங்களில் தங்கி, அவற்றை விட்டும் ஓடி, நிலைத்து ஓரிடத்தில் நிற்க முடியாமல் தடுமாறிய அவர் பெற்ற அனுபவங்கள் அதிகம். அவரின் 'போதி' சிறுகதை அதைத் தெளிவாகவே சுட்டிக்காட்டுகிறது. இத்தகைய நிலையில் மட்டுமே படைப்பாளி இளவயதில் கூட, முதிர்ச்சி பெற்று விடுகிறான். இந்த முதிர்ச்சி, உண்மையைக் கண்டறிந்து, துணிவுடன் அல்லது உறுதியுடன் அதை வெட்ட வெளிச்ச மாக்குகிறது.

இனி, கீறல்களில் பிரச்சினைகளுக்குத் தீர்வு எவ்வாறு அமைகிறது என்று ஆராயலாம். கீறல்கள் குடும்பத்தின் கதையானாலும், அது சமூகத்தைக் குற்றப்படுத்துகிற நாவல். சமூக அமைப்பே அனைத்துக் குற்றங்களுக்கும் காரணம் என்பதைக் கீறல்கள் விளக்குகிறது. எனவே, தீர்வு குடும்பத்திலிருந்து பிறக்காமல் சமூகத்திலிருந்து பிறக்க வேண்டும் என்பதே கீறல் காட்டும் உண்மை.

சமூகத்தின் சாதீய வட்டங்கள் உடைய, பொருளாதார மாற்றங்கள் தேவை. அத்தகைய பொருளாதார மாற்றங்களுக்குக் கீறல்கள் 'கம்யூனிச'த்தை ஒரு தீர்வாகக் கூறுகிறது. அந்தக் கம்யூனிசம், வெறும் கம்யூனிசமாக அல்லாமல் ஆன்மீகக் கம்யூனிசமாகக் கூறப்படுகிறது. நாம் முன்னர் குறித்தவாறு இது கட்சி சம்பந்தப் பட்டதல்ல; கோட்பாடு சம்பந்தப்பட்டது.

திருச்சபை கம்யூனிசமாக மாற வேண்டும் என்பதே கீறல்கள் கூறும் கருத்து. அது கிறித்தவத் திருச்சபையை மட்டும் குறிப்பதல்ல, அனைத்துத் திருச்சபைகளுக்குமான ஒரு கருத்தாக்கம். திருச்சபைகளைக், கம்யூனிசமாக-நாத்திகமாக்கும் முயற்சியல்ல. இறைவனைப் பொதுமைப்படுத்தி, பெயரற்ற இறைவன் மூலம் புதிதாய்ப் பிறப்பெடுக்கிற ஒரு திருச்சபையைக் கீறல்கள் கனவு காண்கிறது. இந்தத் திருச்சபை ஆன்மீகக் கம்யூனிசமாகக் கூறப்படுகிறது.

இன்றைய நிலையில், இது அபத்தம்; காரணம், சிறுதெய்வ வழிபாட்டு - பழங்குடி மனநிலையிலேயே உருவாகி வளர்ந்து வருகிற திருச்சபைக்கு அல்லது திருச்சபைகளுக்கு இவ்விதமான கருத்தாக்கங்கள் சாதாரணமானவை அல்ல - இவை 'பீரங்கி'த் தாக்குதல்கள். இங்கு பீரங்கித் தாக்குதல்களை இந்தத் திருச்சபைகள் ஏற்கக்கூடிய நிலையில் இல்லை.

இதனால்தான், 'ரப்பர்' நாவல் தீர்வு நிலையில் வேறுபடுகிறது. 'ரப்பர்' கிறித்து இல்லாத ஒரு திருச்சபையை - ஆடம்பரமான அதன் நிலைகளை - போலியான அதன் நடத்தையை எதிர்த்துக் கருத்துக் கூறினாலும், தீர்வு என்று வருகிறபோது 'சத்தியத்'துக்குக் கட்டுப்பட்டு நிற்கிறது. அது கூறும் தீர்வு, ஏசுகிறித்துவின் வாயிலிருந்து உதிர்க்கப் பட்ட தீர்வே தவிர, ஜெயமோகனின் தீர்வல்ல; ஆனால் ஜெயமோகன், அதிகப்படியாகச் சிந்தித்தே இந்தத் தீர்வுக்கு வருகிறார். அது-

'ஆகாயத்துப் பறவைகள் விதைப்பதுமில்லை, அறுக்கிறதுமில்லை' என்பதாகச் சுட்டப்படும் ஏசுகிறித்துவின் உன்னத உவமையின் புதிய பிறப்பு;

இந்த வரிகளைத் திருச்சபை மேலோட்டமாகக் கருதிவிட்டது. எனவே, இதன் ஆழ்பொருள் திருச்சபையின் செவிகளில் சரியாக விழாமலே போயிற்று. ஆனால் ரப்பர் நாவலைப் படிக்கிற போது இதன் ஆழம் விளங்குகிறது. இந்த வரிகளில் அர்த்தம் என்ன? அதற்குள் மறைபொருளாய் ஒளிந்து கிடப்பது எது? இதை நாவலோடு இணைத்துச் சிந்திக்கிற போது மட்டுமே கண்டுகொள்ள முடிகிறது.

மனிதன் சமுதாயமாக வாழத் தொடங்கியபோது, 'வல்லவன் வகுத்ததே வாய்க்கால்' என்பது போல, அந்தச் சமுதாயத்தில் ஒரு பிரிவு வசதிகளைப் பெருக்கி உயர்மட்டத்துக்கு ஏறுகிறது. மொத்தச் சமுதாயத்தின்

உள் பிரிவான இந்த உயர்மட்டச் சமுதாயம் எஞ்சியதை ஒடுக்கி, கால வளர்ச்சியில் உயர் சாதியாக - நிலஉடைமைச் சமுதாயமாக அல்லது முதலாளித்துவச் சமுதாயமாக மாறுகிறது.

இந்த உயர் மட்டச் சமுதாயம் கற்றுக் கொள்ளத் தவறிய ஒரு பாடம் உண்டு. அது 'ஆகாயத்துப் பறவைகள் விதைப்பதுமில்லை, அறுப்பதுமில்லை, களஞ்சியங்களில் சேர்த்து வைப்பதுமில்லை' என்ற பாடம் தான். படிக்கத் தவறிய இந்தப் பாடத்தினால் - சமுதாயத்தில் போட்டியும் பொறாமைகளும் பலத்த வன்முறைகள் உருவாகி வாழ்வதற்கான போராட்டங்கள் உருவெடுத்தன.

முதல்கட்டச் சமுதாயம், இந்தப் பாடத்தை உணர்ந்து படித்திருக்குமானால் இந்தப் பிரிவினைகளும், பிரிவினை விளைவுகளும் ஏற்பட்டிருக்காது. 'ஆசையை அறு' என்பதன் மற்றொரு வடிவமே, 'ஆகாயத்துப் பறவைகள் விதைப்பதுமில்லை, அறுப்பதுமில்லை' என்பது.

சமுதாயத்தின் சீர்குலைவுகள் தொடங்கிய பின்னர், ஆன்மீகச் சிந்தனைவாதிகள் ஆன்மீகம் தழுவி பல அறிவுரைகளைத் தந்தனர். சில ஆன்மீகச் சிந்தனைகள் - குழு நிலை பெற்று, ஆன்மீகக் குழுக்களாகி - மதங்களாகி, மீண்டும் பிரிவினைகளை மத அடிப்படையில் ஏற்படுத்தின. இதுவும் பிரிவினை சக்திகளே தவிர ஒருமைப்பாட்டுச் சக்திகளல்ல. ஆனால், எல்லாப் பிரிவினைகளையும் அகற்றுகின்ற ஒரே அறிவுரை இங்கு உவமை வாயிலாக உச்சரிக்கப்படுகிறது. அது அனைத்துப் பிரிவிகைளுக்கும் எதிராக - ஆக்ரமிப்புக் கோட்பாடுகளுக்கு எதிராக ஒரு அறைகூவலாக நிற்கிறது.

இயற்கையைக் கொன்று பணம்பண்ண விரும்பாத கண்டங்காணி இதற்கான இலக்கணமாக நிற்கிறார். இவருக்கு முரணாகப் படைக்கப்பட்டுள்ள பெருவட்டர் ஆக்ரமிப்புச் சக்தியாக நிற்கிறார். இவரின் மகனாக வருகிற செல்லையா பெருவட்டர் - "மகன் செல்லையாவின் ஆசை பணத்தைப் பெருக்குவதில் எல்லை கடந்து சென்று, ரப்பரை வெளிநாட்டுக்கு ஏற்றுமதி செய்தது; அதில் ஏற்பட்ட பொருளாதாரச் சிக்கல்கள், அச்சிக்கல்களை மேலும் சிக்கலாக்க, நிகழ்ந்த அரசியல் மாற்றங்கள், ஆகியவை பொன்னுமணி பெருவட்டர் குடும்பத்தின் பெரு வளர்ச்சியை அடிமட்டத்துக்குக் கொண்டு வந்தன." (வே. வீராசாமி)

இத்தகைய எல்லை கடந்த ஆசை கொண்டவராகக் காட்டப் படுகிறார், செல்லையா பெருவட்டர். இதன் விளைவு அழிவு. இவர்கள் அனைவரும் உலகச் சமநிலையைக் கெடுத்தவர்கள். இத்தகைய எல்லை மீறிய பண ஆசை இயற்கையல்ல; செயற்கை. ஆக, செயற்கை வாழ்வை

உருவாக்கிக் கொண்ட இந்த மனிதர்கள் இன்று அல்லது நாளை அழிவைச் சந்தித்தே ஆக வேண்டும் என்பது கட்டாயமாகிறது.

ரப்பர் நாவல் இந்த அழிவு நிலையை இரண்டு கட்டமாக விளக்குகிறது. ஒன்று அப்புக்குட்டனின் சாம்ராஜ்யச் சரிவு; மற்றொன்று பெருவட்டரின் பேரரசின் சரிவு. ஒன்று அறைக்கல் தம்புரான்களின் சரிவு; மற்றொன்று தோட்டம் பெருவட்டர்களின் சரிவு.

இந்தச் சரிவு சமுதாயத்துக்கு ஒரு பாடத்தைப் புகட்டுகிறது. அது சமுதாயத்தை மொத்தமாய் ஆக்கிரமித்துக் கொள்ளுகிற சிறுபான்மைச் செல்வந்தர்களின் நாளைய வீழ்ச்சி. இந்த வீழ்ச்சியை முன்னறிவித்து நிற்கிறவனாக அறைக்கல் குடும்பத்து வேலப்பன் நாயர் நிற்கிறான்; தங்கம் நிற்கிறாள்; இவர்கள் தரும் பாடம், 'எல்லாம் மாயை' என்பதுதான். 'சூரியனுக்குக் கீழே அனைத்தும் மாயை'களாக நிற்க. இந்த உண்மையைச் சற்றும் புரிந்து கொள்ளாத ஒரு வர்க்கம் மறுபடி மறுபடி ஆக்ரமிப்பில் இறங்குகிறது. இதனால் ஏற்படும் விளைவு, இயற்கை சமநிலை இழக்கிறது என்பது மட்டுமல்ல, சகோதரத்துவம் சமநிலை இழக்கிறது என்பதுமாகும். சகோதரத்துவம் அழிந்து மனிதன் நிலைபெற்று நிற்க முடியும் என்பது வெறும் கனவுதான்.

ரப்பர் குறியீடாக ஆக்ரமிப்பை விளக்குகிறது. அது காட்டை ஆக்கிரமித்துக் கொண்டது. ஆனால், அது தரும் ரப்பர்பால் வேதியல் மாற்றங்களுக்கு உட்படுத்தப்பட்டு தார்ச் சாலைகளை, உரசி உரசிச் சாகிறது.

ரப்பரின் ஆக்ரமிப்பால் இயற்கை சமநிலை இழந்தது. எனவே, சமநிலையை மீண்டும் உருவாக்கச் சமத்துவம் தேவைப்படுகிறது. இந்தச் சமத்துவத்தை- ''ஆகாயத்துப் பறவைகள் விதைப்பதுமில்லை, அறுப்பதுமில்லை'' என்ற வாசகங்கள் மூலம், ஜெயமோகன் மறைபொருளாய்க் காட்டுகிறார். இது சமுதாயத்துக்குத் தரப்படுகிற அறிவுரை - அல்லது உபதேசம். இந்த உபதேசம், சமூக மாற்றத்தை ஏற்படுத்தும் என்று நினைக்கிறார் ஜெயமோகன்.

ஆனால், எந்தத் திருச்சபை இந்த வாசகத்தை உள்வாங்கிப் பிரச்சாரம் செய்ய வேண்டுமோ அந்தத் திருச்சபையே, இந்த வாசகப் பிரச்சாரத்தில் பின்வாங்கிக் கொண்டிருக்கிறது. இந்தத் திருச்சபையே பின் வாங்கிக் கொண்டிருக்கும்போது, இந்த வாசகங்களின் ஆழம் உலகை எட்டுவது கடினமாகிறது.

இந்த நிலையில், ஜெயமோகன் திருச்சபையின் போக்கை, நாகரிகமாகக் கடிந்து கொண்டு, இந்த வாசகங்களைப் பிரச்சினைக்குத் தீர்வாகக் காட்டுவது, நிச்சயம் வரவேற்கக்கூடியதே. இந்த ஆக்கிரமிப்பு

'மாயமான் வேட்டை'யே! இந்த ஆக்கிரமிப்புக்கு எதிராகக் கூறப்படும் இந்தப் பிரச்சார வாசகம் - சமத்துவச் சமுதாயத்தை உள்வாங்கியே கூறப்படுகிறது.

கீறல்கள் 'ஆன்மீக கம்யூனிசம்' என்ற கருத்தாக்கத்தை வலியுறுத்திச் சமத்துவச் சமுதாயத்தை அல்லது பொதுஉடைமைச் சமுதாயத்தைப் பரிந்துரை செய்ய, ரப்பர், ஆகாயத்துப் பறவைகளை உபதேசப் பொருளாக்கிச் சமத்துவச் சமுதாயத்தைக் கனவு காண்கிறது.

இரு நாவல்களும் நோக்க அடிப்படையில் ஒன்றுபடுகின்றன என்றே தோன்றுகிறது. எது எப்படியிருப்பினும், இரு நாவல்களும் வன்முறைக்கு எதிரான செய்தியையே தருகின்றன.

## வன்முறை எதிர்ப்பு

வன்முறையைத் தூண்டுவதாகவும், இரத்தப் புரட்சிக்கு வித்திடுவதாகவும், சரியாகவோ, தவறாகவோ குற்றஞ்சாட்டப்பட்ட சிவப்பு நிறக் கம்யூனிசத்தைக் கீறல்கள் ஆன்மீகத்தோடு இணைத்துக் காண்கிறது. ஆன்மீகத்தின் அடிப்படை மிதவாதமே. அது, "அப்போது அவர்கள் தங்கள் பட்டயங்களை மண்வெட்டிகளாகவும், தங்கள் ஈட்டிகளை அரிவாள்களாகவும், அடிப்பார்கள்" (ஏசாயா, 2:4) என்பதே தீர்க்கத்தரிசனக் கனவு. இனிச் சண்டையில்லை, போர் இல்லை, வன்முறையில்லை என்பதே இதன் அர்த்தம்.

ஆன்மீகம் என்பது மதம் தழுவியதல்ல. ஆன்மீகம் மதமற்ற கடவுள் கொள்கை. மதம் பிரிவினை சக்தியே. அது ஒன்றை ஒன்று தாக்கும் வெறி; ஆன்மீகம் நடுநிலையானது; பகையற்றது; பண்பட்டது, பண்பாடு தழுவியது; இரத்தம் சிந்தாதது; சகோதரத்துவம் உடையது. எனவே, ஆன்மீகக் கம்யூனிசம் வன்முறையற்ற ஒருங்கிணைந்த சமுதாயத்தை உருவாக்கும் என்பதே கீறல்கள் காட்டுவது. இது நிச்சயம் வன்முறைக்கு எதிரான புதிய முயற்சியே.

ஆகாயத்துப் பறவைகளைச் சுட்டிக்காட்டும் உபதேச வாசகங்கள் சமாதான முறையிலான தீர்வுதான். அதுவும் வன்முறையற்ற ஒரு தீர்வையே உலகுக்கு வழங்குகிறது. ஆனால் இந்த மனநிலையைச் சமுதாயத்தில் உருவாக்குவது அத்துணை எளிதல்ல. இருந்தாலும் மானுடம் இந்த வாசகத்தால், வருங்கால நம்பிக்கையை உருவாக்கிக் கொள்ளலாம்.

## சமுதாய மாற்றம் - மேல்நிலையாக்க வீழ்ச்சி

நாம் ஆய்வுக்கு எடுத்துக் கொண்ட முதல் நாவல் ஒரு மாற்றுக் காலகட்டத்தைப் பிரதிபலிக்கிறதென்று கூறினோம். அந்த மாற்றுக் காலகட்ட வரலாற்று அடிப்படையில், அடுத்து நாம் கூறிய மூன்று

நாவல்களும் - புத்தம் வீடு, கீறல்கள், ரப்பர் - மேல்நிலையாக்க வீழ்ச்சியைத் தெளிவாகக் காட்டின.

மாற்றுக் காலகட்டங்களில், உருவான மேல்நிலையாக்கமும், புதிய பிராமண (சாதீய அடிப்படைச் சொல் அல்ல) மேல்நிலையாக்கமும் - நாடார்கள் கிறித்தவ மத அடிப்படையில் புதிய பிராமணர்களாக (அல்லது புதிய இசுரவேலர்களாக) உருவெடுத்ததும், சமூக ஆக்கிரமிப்புச் சக்திகளாக விளங்கியதும் இந்த மூன்று நாவல்களிலும் தெளிவாக உள்ளன.

சமுதாய மாற்றக் கொள்கையை உள்வாங்கி உருவான கிறித்தவம் கீழ்ச்சாதியினரின் விடுதலைக்காய்ச் செய்த தொண்டு, மீண்டும் ஒரு தீய சமுதாயத்தையே உருவாக்கியது என்பது இந்த நாவல்களில் தெளிவாகச் சுட்டப்பட்டன. மேல்நிலையாக்கத்தால் பலனில்லை என்பது தெளிவு.

ஏற்கனவே, மேல்நிலையாக்கத்துக்கு உட்பட்டிருந்த நாயர் சமுதாயம், கீழ்நிலையாக்கத்துக்குத் தள்ளப்பட்டதும், கீழ்நிலையாக்கத்தில் ஒடுங்கிக்கிடந்த நாடார் சமுதாயத்தின் ஒரு பகுதி மேல்நிலையாக்கம் பெற்றதும்; பின்னர் மேல்நிலையாக்கம் பெற்ற நாடார் சமுதாயம், ஒழுக்கரீதியிலும், மற்ற நிலையிலும் கீழ்நிலையாக்கத்தை நோக்கி இறங்கி வருவதையும் ரப்பர் தெளிவாக்கியது.

சமுதாய மாற்றம் என்பது, ஒரு பிரிவு மேல்நிலையாக்கம் பெறுவதல்ல; அது சமநிலையாக்கம் பெறுவது - என்பதை இந்த நாவல்கள் கருவாக உணர்த்தின எனக்கொள்ளலாம்.

### சமநிலையாக்கம்

சமுதாயத்தின் ஒரு பகுதியினரை அச்சுறுத்திக் கொண்டிருக்கும் - அல்லது மாற்றத்துக்கு எதிராய்ப் பேச வைக்கும் - பொதுவுடைமை, சமத்துவம் என்ற 'இசம்' தழுவிய இந்த உன்னதக் கோட்பாட்டை நாம் சமநிலையாக்கம் என்று குறிக்கலாம்.

### சமநிலையாக்கத் தத்துவம்

சமநிலையாக்கம் என்பது மனிதர்கள் சம்பந்தப்பட்டது மட்டுமல்ல; அது இயற்கை சம்பந்தப்பட்டதுமாகும்.

மலையின் சமநிலையைக் கெடுத்து உருவாகிற ஆக்கிரமிப்புச் சக்தியான ரப்பர் - இயற்கையின் சம்நிலையைக் கெடுத்துச் சுற்றுப்புறச் சூழலைப் பாழ்படுத்துகிற போது, ரப்பரைக் கவனமாகக் கண்காணித்து புதியதோர் சமநிலையை உருவாக்க வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. ரப்பரை வெட்டிச் சாய்த்து விட்டு இந்தச் சமநிலையை உருவாக்கத் தேவையில்லை. ரப்பர் ஒரு விகிதாசாரத்தை மட்டுமே பெறும் போது இந்தச்

சமநிலை உருவாகும். அளவு மீறிச் செல்லும்போது சமநிலை முற்றிலும் அழியும்.

இயற்கை சமநிலை பெற்றால் மட்டுமே மனிதன் அச்சமின்றி வாழமுடியும். இங்கு மையப் பொருள் மனிதனே. மனிதச் சமநிலையாக்கம் என்பது - இயற்கை சமநிலையாக்கத்தை உருவாக்கினாலொழிய சாத்தியப்பட முடியாது

எனவே, சமுதாயச் சமநிலையாக்கம் உருவாக, சமுதாயத்தோடு தொடர்புடைய அனைத்தும் சமநிலை பெற வேண்டியுள்ளது. இந்தத் தத்துவம் மட்டுமே எதிர்காலச் சமுதாயத்தில் மனித வாழ்வுக்கும் பாதுகாப்பாய் அமைய முடியும்.

கீறல்களானாலும், ரப்பரானாலும் அடிப்படையில் கூறும் கருத்தாக்கம் இதுவே.

## முடிவுரை

குமரி மாவட்டத்தில் தோன்றிய மூன்று நாவல்களான 'புத்தம் வீடு', 'கீறல்கள்', 'ரப்பர்' - 'கள' அடிப்படையில் வேறுபட்டாலும், இவை மூன்றும் அடிமட்டத்தில், மென்மையாகவும், உச்சமாகவும், ஒருவேளை உரக்கவும் கூறும் கருத்தாக்கம் சமநிலையாக்கமே.

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை–600 113
## அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| பெ.நா. அப்புசுவாமியின் அறிவியல் கட்டுரைகள் தொகுதி-2 | 80.00 |
| தாய்நாட்டிலும் மேலை நாடுகளிலும் தமிழியல் ஆய்வு | 75.00 |
| ஜப்பானியக் காதல் பாடல்கள் | 75.00 |
| குறுந்தொகை - ஒரு நுண்ணாய்வு | 80.00 |
| பயிலரங்கக் கவிதைகள் | 18.00 |
| தமிழ் நாடகம் - நேற்றும் இன்றும் | 30.00 |
| நாடகமும் நாடகக் கம்பெனி அனுபவங்களும் | 60.00 |
| இராமாயணம் - தோற்பாவை நிழற்கூத்து | 125.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி-4 | 110.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி-3 | 110.00 |
| அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி-2 | 110.00 |
| எட்டையபுரப் பள்ளு | 60.00 |
| திருக்குறள் பூரணலிங்கம்பிள்ளை ஆங்கில மொழிபெயர்ப்பு | 100.00 |
| தொல்காப்பியப் பாவியல் கோட்பாடுகள் | 40.00 |
| ON TRANSLATING TIRUKKURAL | 50.00 |
| ஐங்குறுநூறு மூலமும் உரையும் | 85.00 |
| தனிநாயகம் அடிகளாரின் சொற்பொழிவுகள் | 40.00 |
| சொற்பிறப்பு - ஒப்பியல் தமிழ் அகராதி | 200.00 |
| THIRUVACHAGAM | 175.00 |
| இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் நாடகங்கள் | 75.00 |
| நானும் என் எழுத்தும் | 50.00 |
| தமிழர் கொடிகள் | 30.00 |
| THE NARRINAI FOUR HUNDRED | 175.00 |
| சர்வக்ஞர் உரைப்பா | 40.00 |
| தமிழில் ஆவணங்கள் | 75.00 |
| தமிழ் மேடை நாடக வரலாறு | 55.00 |
| பரதநாட்டிய சாஸ்திரம் | 150.00 |
| இந்திய விடுதலைக்குப் பின் தமிழிலக்கியச் செல்நெறிகள் | 55.00 |
| மேலை நோக்கில் தமிழ்க்கவிதை | 100.00 |
| SOUND CORRESPONDENCES BETWEEN TAMIL & JAPANESE | 35.00 |
| அயலகத் தமிழ்க்கலை, இலக்கியம், சமகாலச் செல்நெறிகள் | 125.00 |
| TAMIL LITERATURE AND INDIAN PHILOSOPHY | 200.00 |
| சதகத்திரட்டு தொகுதி-1 | 80.00 |
| தொல்காப்பிய இலக்கண மொழியியல் கோட்பாடுகள் | 70.00 |
| எழுத்திலக்கணக் கோட்பாடு | 70.00 |
| சதகத்திரட்டு தொகுதி-2 | 55.00 |
| தமிழ்ப் பண்பாடு | 25.00 |
| உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் சுவடி விளக்க அட்டவணை-4 | 70.00 |
| சுவடிச்சுடர் | 120.00 |
| தமிழலக்கியத்தில் ஊனமுற்றோர் | 45.00 |
| தமிழக மகளிரியல் | 80.00 |
| தமிழர் கட்டிடக்கலை | 30.00 |

**Pub No. 423** தமிழ் நாவல்களில் சமுதாய மாற்றம் **20.00**